# திருவாசகமும் திருவாய்மொழியும்



வித்துவான்
நாராயண வேலுப்பிள்ளை

சரசு பதிப்பகம்

# திருவாசகமும்
# திருவாய்மொழியும

ஆசிரியர்

**வித்துவான் M. நாராயணவேலுப்பிள்ளை**

(ஓய்வு பெற்ற தமிழாசிரியர்)

**சரசு பதிப்பகம்**

57, இராமலிங்கேஸ்வரர் தெரு,
வன்னியர் தேனாம்பேட்டை,
சென்னை-600 018.

# முன்னுரை

திருவாசகம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாவதாக விளங்குகிறது. இது மாணிக்கவாசகரால் அருளிச் செய்யப்பட்டது. இந்நூல் உருகா உள்ளத்தையும் உருக்கி உயிர்க்குப் பசுத்துவங்கெடுத்துப் பதித்துவம் அருள வல்லது. ஆதலால் இது செந்தமிழ்க்கு அன்பு மறையாய்ப் போற்றப் பெறுகின்றது. திருவாசகம் என்ற பெயர் திருவுடைய சொற்களால் ஆகிய அருள் நூல் எனப் பொருள் படும். திருவாசகத்தைத் தேன் எனக் கூறுதல் மரபு. தேன் உடற்பிணிக்கு மருந்தாதல் போல இந்நூல் உயிர்ப்பிணிக்கு மருந்தாகும். இது 659 பாடல்களைக் கொண்டது. மாணிக்க வாசகர் சைவ சமயாச்சாரியர் நால்வருள் ஒருவர்.

நம்மாழ்வார் பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவர். இவர் பாடிய மொழியில் 1102 பாடல்கள் உள்ளன. திருவாசகமும் திருவாய்மொழியும் ஞான நூல்கள். இவை சைவ வைணவ சமயங்களில் வேதமாகப் போற்றப்படுகின்றன. திருவாய் மொழி சாமவேத சாரமாகும்.

சைவ வைணவ ஒற்றுமையைக் கருத்தில் கொண்டு இவ்விரு ஞான நூல்களையும் ஒப்புமைப்படுத்தி எளிய இனிய நடையில் எழுதியுள்ளேன். வாசகர்கள் படித்துப் பயன் பெறுவார்களாக. இந்நூலை அழகுற அச்சிட்டுப் பிரசுரம் செய்த பதிப்பகத்தாருக்கு என் நன்றி.

காஞ்சிபுரம்
25-6-85

M. நாராயணவேலுப்பிள்ளை
ஓய்வுபெற்ற தமிழாசிரியர்.

# பொருளடக்கம்

# திருவாசகமும் திருவாய்மொழியும்

---

## இறைவன்

### முன்னுரை

உலகத்திற்கு உண்மை ஞானத்தை ஊட்டிய நாடு இப் பாரத நாடு. அதனிலும் உண்மை ஞானம் படிப்படியாய் வளர்ந்து முதிர்ந்து பழுத்த நாடு இத்தமிழ் நாடு. ஆழ்வார் களும் நாயன்மார்களும், மற்றும் பல பெரியார்களும் அவதரித்த நாடும் இத்தமிழ் நாடுதான். இத்தகைய தமிழ் நாட்டில் வாழ்ந்த பண்டைய தமிழ்ப் பெருமக்கள் தாங்கள் வழங்கி வழிபட்டு வந்த முதற்பொருளை இறை அல்லது இறைவன் என்ற பெயராலும் வழங்கி வந்தார்கள்.

### இறைவன் என்ற சொல்லின் பொருள்

இறைவன் என்ற சொல்லிற்கு 'எப்பொருளிலும் தங்கு கிறவன்' என்று பொருள் கூறுவார், அடியார்க்கு நல்லார் என்ற உரையாசிரியார். இச்சொல் 'இறு' என்னும் பகுதி யடியாகப் பிறந்த பெயர் ஆகும். இறைவன் என்னும் பெயர் சிவபெருமான், முருகவேள், மகா சாத்தனார், அருகக் கடவுள், இந்திரன், அரசன் முதலானவர்கட்கு வழங்கப்

பட்டிருத்தலையும் பண்டை இலக்கிய இலக்கணங்களாலும், அவற்றின் உரைகளாலும் காணலாம்.

## முழு முதற் கடவுள்

இறைவன் என்ற சொல் 'எப்பொருளிலும் தங்குகிறவன்' என்ற அதன் பொருளை நோக்குமிடத்துப் பலர்க்கும் பொதுப்பட வழங்கும் வழக்கு பொருத்தமற்றது. முற் காலத்தில் தமிழ் மக்கள் அப்பெயரால் முழு முதற் கடவுளையே குறித்து வழங்கி வந்தார்கள் என்றும், அம்முழு முதற் கடவுளின் அமிசமாக விளங்கிய ஒரு சிலரையும் அப்பெயரால் பிற்காலத்தில் உபசார வழக்கமாய் வழங்க லானார்கள் என்றும் கொள்ளுதலே பொருத்தமாகும்.

## இறைவன் என்ற சொல் பற்றி, திருவள்ளுவர் கூற்று

திருவள்ளுவர் தமது திருக்குறளின் கடவுள் வாழ்த்தில் இறைவன் என்ற சொல்லால் முழு முதற் கடவுளையும், பொருட்பாலில் இறை என்ற சொல்லால் அரசனையும் குறித் துள்ளார். இவ்விரு சொற்களையும் நன்கு ஆராயமிடத்து முறை செய்து காப்பாற்றும் முதற் பொருளுக்கே இவற்றைப் பெயர்களாகத் திருவள்ளுவர் கொண்டார் என்பது தெளிவாக விளங்கும். பரிமேலழகருடைய கருத்தும் இதுவே யாம். விஷ்ணு, வாசுதேவன், நாராயணன் என்ற பெயர் களும் இறைவன் என்னும் சொல்லின் பொருளனவே.

## நம்மாழ்வாரும் இறையவர் என்ற சொல்லும்

தமிழ் கூறும் நல்லுலகத்தில் அவதரித்தருளிய நம்மாழ்வார் தம்முடைய திருவாய் மொழியில் 'இறையவர்' என்ற சொல்லை எடுத்தாண்டுள்ளார். 'முக்குணங்களின் வசப்பட்ட உலக மக்கள் தாம் தாம் அறிந்த வகைகளால் அறியப்பட்ட அவ்வத் தேவர்களே இறைவர் ஆவர் என்று நினைந்து அத்தேவர்களுடைய பாதங்களையே பற்றுக்

கோடாகப் பற்றுகிறார்கள். அவர்களால் பற்றப் படுகின்ற அத்தேவர்களும் இறைவர் என்று கூறப்படுவதற்குக் குறை வில்லாதவர்களாகவே இருக்கின்றார்கள். அத்தேவர் களுடைய உயிர்களுக்குள் உயிராக நின்று எல்லார்க்கும் இறைவனாகிய திருமகள் கேள்வன் திருவருள் புரிகின்றான். ஆதலால் அவர்களை வணங்குகின்ற மக்கள் தாம் தாம் விரும்பிய பலன்களைப் பெறுகின்றனர் என்பது அவர் திருவாய் மலர்ந்தருளிய பாடலொன்றின் கருத்து.

### கடவுள் என்ற சொல்

எல்லாப் பொருள்களிலும் தங்கியிருப்பவன் இறைவன் எனினும் அப்பொருளினுடைய வளர்தல் குறைதல் முதலிய தன்மை வேறுபாடுகளும் இன்ப துன்பங்களும் தன்னைச் சாராமல் அவற்றினை மக்களுடைய மனம், மொழி, மெய் களையும் கடந்து நிற்பவன் அவன் என்பதனை உணர்த்த அப்பரம் பொருளுக்குக் கடவுள் என்ற பெயரையும் வழங் கினர் முன்னோர்.

உடம்பினுள் இருக்கின்ற உயிர் உடம்பின் வளர்தல், பருத்தல் முதலிய விகாரங்களை அடையாமை போல உடம்பு, உயிர் என்னும் இரண்டனுள்ளும் இருக்கின்ற இறைவனும் அவ்விகாரங்களை அடைவதில்லை. திருமால் அவதரித்த அவதாரங்களுள் நரசிங்க அவதாரம் இறைவன் என்ற சொல்லின் பொருளையும், திருவிக்கிரம அவதாரம் கடவுள் என்ற சொல்லின் பொருளையும் விளக்கும். கடவுள் என்ற சொல்லை இறைவன் என்ற சொல்லைப்போல உபசார வழக்கால் தேவர்களையும், முனிவர்களையும் குறிக்க வழங்கி வந்தனர் நம் முன்னோர்.

### உருவ வழிபாடு

இத்தகைய இறைவனை ஓர் உருவத்தில் வைத்தே வணங்கி வந்தனர் பண்டைத் தமிழ்ப் பெருமக்கள் என்பதைத் தொல்காப்பியம் முதலிய பழந்தமிழ் நூல்களால்

அறியலாம். திருக்குறளில் உள்ள கடவுள் வாழ்த்து அதிகாரத்தால் திருவள்ளுவரும் இறைவழிபாட்டினை உருவ வழிபாடாகவே கொண்டனர் என்பதை 'வாலறிவன் நற்றாள்', 'மாணடி', 'அந்தணன் தாள்', 'இறைவனடி' என்ற தொடர்கள் விளக்கும். பதிற்றுப் பத்து, புறநானூறு, பரிபாடல் முதலான நூல்களிலும் இவ்வுருவ வழிபாட்டு உண்மை கூறப்படுதல் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் 'இறைவன்' 'கடவுள்' என்ற சொற்கள் முழுமுதற் கடவுளை உணர்த்தும் சொற்கள் என்பதும், உபசார வழக்கால் அவை பிற பொருள்களையும் குறித்தன என்பதும் அத்தகைய பரம்பொருளைப் பழந்தமிழ் மக்கள் உருவ வழிபாட்டு முறையில் வணங்கினர் என்பதும் தெரிந்தோம்.

**நம்மாழ்வார் கொண்ட கடவுட் கொள்கை**

நம்மாழ்வார் கொண்ட கடவுள் கொள்கை மிகவும் மேம்பாடுடையது. வகுப்பு வாதம் கொண்ட மக்களுடைய கொள்கையே அன்று; எங்கும் ஒப்ப முடிந்த உயர்வான கோட்பாடுகளையே இவர் ஆண்டுள்ளார். 'கருவுடைத் தேவு இல்கள் எல்லாம் கடல் வண்ணன் கோயில்களே' என்பதில் எந்த தேவருடைய ஆலயமும் திருமால் கோயில் என்ற கொள்கை எத்துணை சமரசமானது. அரி, அயன், அரன் என்னும் இவரை உணர்ந்து உணர்ந்து, உரைத்து உரைத்து இறைஞ்சுமின் மனப்பட்ட தொன்றே (திருவாய் மொழி 1—3) என்ற அடிகளில் உள்ள சமரச நோக்கத்தை உன்னுமின்.

நளிர்மதிச் சடையனும் நான்முகக் கடவுளும்
தளிரொளி இமையவர் தலைவனும் முதலா
யாவகை உலகமும் யாவரும் அகப்பட
நிலநீர் தீகால் சுடரிரு விசும்பும்

மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க
ஒருபொருள் புறப்பா டின்றி முழுவதும்
அகப்படக் கடந்துஓர் ஆலிலைச் சேர்ந்தஎம்
பெருமா மாயனை அல்லது
ஒருமா தெய்வம்மற் றுடையமோ யாமே!

என்று திருவாசிரியத்தின் முடிவில் விரிந்த உலகங்கள் எல்லாம் ஓர் ஆலிலையில் ஒடுங்குவதையும் அதன்மீது ஆண்டவன் பள்ளி கொண்டிருப்பதையும் அவனே ஒப்பற்ற தெய்வம் என்பதையும் கூறியுள்ளார்.

இவர் தமிழ் நாட்டின் தனிப் பெருங்கவியாவார். பக்தி, ஞானம், வைராக்கியம், தெய்வீகக் கருமம் முதலியவற்றை நந்தமிழ் தமிழ்நாட்டில் பரவச் செய்தவரும், சமரச நோக்குடையவருமான நம்மாழ்வார் தோற்றுவித்த சமரச ஞானம் தமிழ்நாட்டில் என்றும் நின்று நிலவுவதாக.

**சமய காலம்**

சங்க காலத்தில் சைவம் என்றும் வைணவம் என்றும் வேறுபாடு இல்லை. பொதுவாக மக்கள் சிவன், திருமால், முருகன், இந்திரன் முதலிய தெய்வங்களை வணங்கி வந்தனர். சங்க காலத்தையடுத்து, வடநாட்டில் தோன்றிய சமண பௌத்த மதங்கள் தென்னாட்டில் பரவலாயின. அவை பிரச்சாரத்தாலும் அரசர்களுடைய ஆதரவினாலும் செல்வாக்குப் பெற்று விளங்கலாயின. சிலப்பதிகாரம் என்ற சமண காவியமும், மணிமேகலை என்ற பௌத்த காவியமும் தோன்றின.

ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் தொண்டை மண்டலத்தைப் பல்லவர்கள் கைப்பற்றி காஞ்சிமாநகரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வரலாயினர். இவர்கள் காலத்தேதான் சைவ வைணவ சமயங்கள் மீண்டும் புத்துயிர் பெற்று மிக வேகமாக வளரலாயின. வானளாவிய கோபுரங்களும் கோவில்களும் கட்டப்பட்டன. நித்திய நைமித்திய வழிபாடுகளுக்காக இறையிலி நிலங்கள்

விடப்பட்டன. மக்கள் சமய வாழ்க்கையை மேற்கொள்ள லாயினர். எனவே அக்காலத்தைச் சமய காலம் எனலாம்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும் தோன்றி, தமது தெய்வீகப் பாடல்களால் மக்களிடையே தெய்வ நம்பிக்கையை உண்டாக்கினர். அப்பாடல்கள் யாவும் செந்தமிழ்ப் பாடல்கள். சந்த இன்பம் கொண்டவை. அவற்றில் தெய்வ மணம் கமழும்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டாகப் பிரிக்கப் பட்டன. சைவ சமயாச்சாரியர் நால்வரும் சைவ சமயத்தைப் போற்றி வளர்த்தனர். ஆழ்வார்கள் பன்னிருவரும் பாடிய பாடல்கள்தாம் நாலாயிரத் திவ்விய பிரபந்தம். இவை யாவும் வேதத்தை அடிப்படையாகக் கொண்டவை. இவை வைணவ வேதங்களாகப் போற்றப்படுகின்றன.

சைவ வைணவ சமயங்கள் வளர்ச்சியடைந்தன. சமண பௌத்த மதங்கள் தமிழ்நாட்டில் தலை தூக்க முடியவில்லை. சைவ வைணவ வேறுபாடின்றி இறைவன் ஒருவனே என்று மக்கள் தெளிந்து அறநெறியில் வாழ்ந்து நற்கதி பெற வேண்டுமென்ற நல்ல நோக்கத்துடன் திருவாசகமும் திருவாய்மொழியும் என்னும் இந்நூலை எழுதியுள்ளேன்.

இவை இரண்டும் தெய்வீகப் பாடல்கள். தூய தமிழ்ப் பாடல்கள். இறை வழிப்பாட்டிற்கு உகந்த நூல்கள். அப்பாடல்களுக்கு எளிய நடையில் பொருள் விளங்குமாறு விளக்கங்களும் ஆங்காங்கே அளித்துள்ளேன். சைவ வைணவ ஒற்றுமை ஓங்குக. இறையருள் பெற்று, மக்கள் நல்வாழ்வு வாழ்வார்களாக.

# மாணிக்கவாசகர்

## முன்னுரை

சைவ சமயாசாரியர் நால்வருள் மாணிக்கவாசகர் நான்காமர். மற்ற மூவர்க்கும் பின் தோன்றியவர். இவர் சிவபெருமானிடத்து அன்பு மிக்கவராய் உலக வாழ்க்கையில் பற்றற்று இருந்தார். ஆத்ம விசாரணையில் ஈடுபட்டார். நிலையில்லாத இவ்வுலக வாழ்வை விட்டு, நிலையுடைய பேரின்பப் பெருவாழ்வு பெற்றார். இவர் இயற்றிய நூல்கள் திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். சைவத் திருமுறைகள் பனிரண்டனுள் இவை இரண்டும் எட்டாந் திருமுறையாக வைத்துப் போற்றப்படுகின்றன. திருவாசகம் திருவுடைய சொற்களால் ஆகிய அருள் நூல். இதைத் தேன் எனக் கூறுவது மரபு. தேன் உடற் பிணிக்கு மருந்தாதல் போல இந்நூல் உயிர்ப் பிணிக்கு மருந்தாகும்.

## திருவாதவூர்

பாண்டிய நாட்டின் வளமிக்க ஊர்களுள் திருவாதவூர் ஒன்று. வயல்களும் குளங்களும் நீர் நிறைந்திருந்தன. வைகையாற்றங்கரையிலுள்ள அவ்வூரில் செல்வர்கள், வரும் பொருளைப் பாதுகாத்து, நல்லோரை ஆதரித்து, அறநெறியில் வாழ்ந்து வந்தனர். தருமம் வளர்ந்தது. அவ்வூரில் எப்போதும் திருவிழாக்கள் நடைபெற்றன. வீடுகளில் விருந்துண்டல், பிள்ளைகளைக் கண்டு மகிழ்தல், வேதம் ஓதுதல்

நாடகங்களைக் கண்டு களித்தல் இவைகளில் மக்கள் திளைத்தனர்.

மேகங்களும் காலா காலத்தில் சோலைகளில் வந்து தங்கி, மழை பெய்து நாட்டைச் செழிப்புறச் செய்தன. முப்போகம் விளைந்தது. வயல்களில் உழுதல், நடவு செய்தல், நீர் பாய்ச்சுதல், கதிர் அறுத்தல் போன்ற வேலைகள் இடைவிடாது நடைபெற்றுக் கொண்டிருந்தபடியால் அவைகள் உயிர் நிரம்பிய உடல் போல விளங்கின.

### அவதாரம்

அவ்வூரில் ஆமாத்திய அந்தணர் குலத்தில் வேத நெறியும் சைவாகம நெறியும் விளங்குமாறு சோமசுந்தரக் கடவுள் அருளால் ஞான சூரியன் போல ஒரு பெருந்தகையார் அவதரித்தார். அவருக்குத் திருவாதவூரர் எனப் பெயரிட்டனர். சம்புபாதாசிரியரும் சிவஞானவதியாரும் தம் மகனைக் கண்டு மகிழ்ந்தனர். தங்கள் குலத்துக்குத் தக்கபடியே சடங்குகள் எல்லாம் செய்தனர். திருவாதவூரரும் இளஞ் சந்திரன் போல வளர்ந்து, வேத முதலான அறுபத்து நான்கு கலை ஞானங்களும் பதினாறு வயதுக்குள் கற்றுணர்ந்தார்.

### அமைச்சர் பதவியேற்றல்

இவர் செய்தியைத் தெரிந்தவர்கள் போய்ச் சொல்ல, அரிமர்த்தன பாண்டியன் கேட்டு, இவரை வரவழைத்துக் கண்டு மகிழ்ந்து, தகுந்த சிறப்புச் செய்து, தன் அரசாட்சிக்குத் தகுதியான மந்திரி பதவியை அளித்து மேம்படுத்தினான். இவர் எல்லாக் கலைகளையும் உறுதியாக உணர்ந்தவராகையால் தனுர் வேதத்திலும் மனு சாஸ்திரத்திலும் விதிப்படி அந்தப் பாண்டியனுக்குக் கண் போன்று முழுதுந் தெரிந்த மந்திரிகளுக்கெல்லாம் முதல் மந்திரியாய் விளங்கினார். பகைவர் சூழ்ச்சிகளை அடக்கினார். இறைபொருள் வாங்கினார். செல்லக் கூடாத தீவுகளிலும் செங்கோல்

செலுத்த உதவினார். மற்ற அரசர்கள் எல்லாம் நட்பு கொள்ளச் செய்தார். அரசனுக்குக் கண்ணுங் கவசமும் போல் இராச காரியம் செய்தார். மக்கள் மகிழுமாறு தண்ணிழல் பரப்பி நீதி செலுத்தி வாழ்ந்தார்.

## ஞானநாட்டம்

அருட் குருவான ஞானாசாரியனது நிறைந்த திருவருளை யல்லாமல் இந்தக் கொடிதான வெவ்விய பாசத்தை நல்ல கேள்விகளால் போக்கிக் கொள்வோ மென்பது தெப்பத்தைக் கொண்டு நீந்தாமல், வெறுங் கையால் கருங்கடலை நீந்த நினைப்பது போல் அல்லவோ என்று வாதவூரடிகள் இன்ப வீட்டைச் சேரவேண்டிய ஆசைக்குள் கட்டுண்டார்.

வேதாகம நூல்களை யுணர்ந்த பெரியோர்கள் திருக் கோயிலுக்கு வரும்போதெல்லாம் போய் கண்டார். கண்டு விசாரித்தறிந்தார். அவ்வாறு உணர்ந்த பொருள்கள் எல்லாம் தாகவிடாய் கொண்டவர்கள் உவர்நீர் உண்டாற் போல் மனதுக்குப் பொருந்தாமல் மந்திரிப் பதவியையும் விடாமல் தவித்தார். தேவர்கள் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுச் சமுத்திரத்தில் தோன்றிய விஷத்தையுண்ட கடவுளிடத்தே உள்ளன்பு கொண்டு, அரச காரியத்தைக் கவனித்துக் கொண்டு வந்தார்.

## குதிரைகள் வாங்குதல்

ஒருநாள் அரிமர்த்தன பாண்டியன் சபையில் இருந்த போது குதிரை பரிபாலகர்கள் வந்து மன்னனை வணங்கி, "மகாராஜனே! நம்முடைய குதிரைக் கூடங்களில் உள்ள குதிரைகள் எல்லாம் முழுதும் நோய் கொண்டவைகளும் அதிக வயது சென்ற கிழங்களுமாய் இருக்கின்றன. நல்ல குதிரைகள் இல்லை" என்று சொன்னார்கள்.

அதுகேட்ட அரிமர்த்தன பாண்டியன் வாதவூர் அடிகளைப் பார்த்து, "இன்றைய தினமே நீர் போய் நம்

முடைய பொக்கிஷ சாலையைத் திறந்து, வேண்டிய திரவியங்களை எடுத்துக் கொண்டுபோய், கடற்கரையில் குதிரைகள் வந்து இறங்குவன தெரிந்து, நல்ல சமயமறிந்து தாவத்தக்க குதிரைகளை வாங்கிக் கொண்டு வருவதற்கு போம்'' என்று விடை கொடுத்தனுப்பினான்.

மன வேறுபாடு கொண்ட வாதவூர் அடிகள் பொக்கிஷ சாலையைத் திறந்து நல்ல குதிரைகள் வாங்கத் தக்க திரவியங்களை வேண்டிய மட்டும் எடுத்துக் கொண்டு, மன்னனிடம் உத்திரவு பெற்றுக் கொண்டு புறப்பட்டார். பண மூட்டைகளை ஒட்டகங்களின் மேல் ஏற்றி முன்னே போக விட்டுப் பின்பு ஆகாயத்தை அளாவிய சோம சுந்தரக் கடவுளின் திருக்கோயிலுக்குப் போய்ப் பொற்றாமரைக் குளத்தில் நீராடி, இறைவனை வணங்கி விடைபெற்றுக் கொண்டார். பல வாத்தியங்கள் முழங்கின. பதாதிகள் சூழ்ந்தன. இரட்டை வெண் சாமரங்கள் வீச, வெண்குடை நிழல் செய்ய பல்லக்கில் சென்றார்.

அப்படி அவர் செல்லுமுன்னே வெள்ளியம்பலத்தில் கால் மாறி யாடின கடவுள், வாதவூர் அடிகளினுடைய இரு வினை ஒப்பும் மலபரிபாகவும் கண்டு அவரை அடிமை கொண்டு பணி கொண்டருள நினைத்து, வேதங்களும் தேடிக் காணக்கூடாத தம் அருளினால் ஓர் அந்தணக் குரு வாகித் தமது திருப்பாதங்களை விட்டு நீங்காத பல சீடர் களுடன் திருப்பெருந்துறைக்கு வந்து ஒரு குருந்த மரத்தின் நிழலடியில் எழுந்தருளியிருந்தார்.

கடல் போலும் திரண்ட சேனைகளுடன் முல்லை நிலங் களும், பாலை நிலங்களும் கடந்து, எழு பிறப்பாகிய கருங் கடலைக் கடக்க வருகிற வாதவூரடிகள், கிருபைக் கடலாகிய பரமேசுரன் நிறைந்து விளங்குகின்ற திருப்பெருந் துறையை அடுத்து வரவர மனத்தில் ஆனந்தக் கடல் பெருகியது. கைகளைத் தலைமேல் குவித்துக் கொண்டார். ஆனந்தக் கண்ணீர் ஒழுக, பித்துப் பிடித்தவர் போலத்

திருப்பெருந்துறைக்கு வந்து சேர்ந்தார். திருக்கோயிலுள் புகுந்து, அங்குள்ள தீர்த்தத்தில் மூழ்கினார். சந்நிதி முன் வந்து மண்ணில் விழுந்து வணங்கினார். துதி பாடினார். திருக்கோயிலை வலமாக வரும்போது ஒரு குருந்த மரத்தைக் கண்டார்.

## குரு தரிசனம்

அங்கே வேத சாஸ்திரங்கள் ஒரு புறத்திலும் உண்மை வழியான சிவஞான போத நூலொரு புறத்திலும் புராணங் களோடு கூடின இசை நூலொரு புறத்திலும் உட்சமயம் புறச் சமயம் என்னும் வேறுபாடான நூல்கள் ஒரு புறத்திலும் இருந்தன. மாணாக்கர்களும் மெய்யடியார்களும் நல்லோர் களும் அப்பியாசிகளும் அளவில்லாதவர்கள் நிறைந்திருந் தனர். வைராக்கியர்களும் வித்துவான்களும் கூடி யிருந்தனர். இவர்களுக்கு நடுவில் கல்லால் மரத்திற்கு ஒப்பான குருந்த மரத்து நிழலடியில் ஒரு கையில் சிவஞான போதம் எழுதிய புத்தகமும் ஒரு கையில் சின் முத்திரையும் கொண்டிருக்கிற கருணா மூர்த்தியைத் தரிசித்தார்.

உடனே அம்பலத்தில் ஆடிய ஆனந்த வடிவமும் வட ஆலமரத்தின் கீழிருந்து சனகாதிகளுக்கு அசைவறச் சொன்ன வடிவமும் ஆகிய இரண்டும் அவர் மனத்தில் தோன்றின. அப்போது கடவுள் திருவுள்ளக் குறிப்புத் தமதுள்ளத்திற்குத் தோற்றுவிக்கத் தெரிந்து, முன்னே வந்து வணங்கினார். இரண்டு கைகளையும் முடியின் மேலேறக் குவித்தார். ஞான தேசிகர் அருள் வகைக்குள் அகப் பட்டார். உடம்பெல்லாம் நெக்கிட மனமுருகிய நல்லொழுக் கத்தையுடைய மாணாக்கர்கள் பக்குவந் தெரிந்து உப தேசிக்கின்ற ஞான தேசிகனென்று அறிந்தார்.

ஞான தேசிகரான கடவுள் வாதவூர் அடிகளுடைய ஒழுக்கத்தையும் பேரன்பையும் கண்டு, அவருடைய உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தமாக வாங்கிக்கொண்டார்.

மனக் கண்ணினால் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் போக்கினார். பாத கமலத்தைச் சூட்டிச் செந்தாமரை போலும் திருக்கையை அவர் தலைமேல் வைத்து, சூட்சும பஞ்சாட்சரத்தினால் பாசக்கட்டை யறுத்து, மெய்யானந்தம் விளைநிலத்துய்த்து, போக்கும் மீட்சியுள் புறம்பிலாப் பூரண வடிவமாக்கினார்.

ஒப்பற்ற ஞான விளக்காகிய கடவுள், பார்த்த பார்வை யால் இரும்புண்ட நீர் போல தம்மைப் பற்றி வாங்கிக் கொண்ட பரிசையும் குரு உபதேசத்தையும், தம்மை மூடி யிருந்த பாசத்தையும் தம்மையும் மறந்து மெய்ஞ்ஞான சொரூபமாய் ஒன்றுந் தெரியாதிருந்தார் வாதவூரடிகள். பின்பு தேனும் பாலும் கற்கண்டும் அமுதமாகத் தித்தித்து, ஊனும் உள்ளமும் உருக, உள்ளொளியைத் தெரிந்து ஆனந்த மான ஆறு நிறம்பக் கரை புரண்டது போலக் கசிந்துரு கினார். நீங்காத ஞானவாக்குச் சரஸ்வதி நாவில் வந்து குடி கொள்ள, கும்பிட்ட கைகளும், நடுங்கிய தலையும், நீர் துளும்ப அழுகின்ற கண்களும் புளகாங்கிதங் கொண்ட தேகமும், நாக்குத் தழுதழுத்த அன்புள்ள வார்த்தைகளு மாகத் தம்மை இழந்தார்.

நெருப்பிலிட்ட நெய்போல் உருகி, வணங்கித் துதிப்பவ ராய், குற்றமில்லாத சொற்களாகிய மாணிக்கங்களைப் பக்தி செய்து, முழுதும் அன்பாகிய கயிற்றில் வரிசையாகக் கோத்து மாலையாகச் சாத்துகின்ற மெய்யன்பராகிய வாத வூர் அடிகளுக்கு ஞானதேசிகராகிய கடவுள், மன மகிழ்ந்து எக்காலமும் வழுவாமல் விளங்குவதாக மாணிக்க வாசக ரென்று திருப்பேர் கொடுத்தருளினார்.

வாதவூரடிகள் தமது பாட்டுக்கு மன மகிழ்ந்தருளின குருபரன் திருவடிகளின் மேல் ஆனந்தக் கண்ணீராட்டி, சொற்களாகிய மலர்களை யணிந்து, தற்போதமாகிய நல்ல அமுதத்தை ஊட்டி, தற்பர ஞான ஓமாக்கினியை மூட்டிச் சிவ பூசையில் முயற்சியுடையவரானார். ஆசையால்

உண்டாகிற பிறவி வாசனை தீர்ந்து, மாணிக்கவாசகரான வாதவூர் அடிகள் தமது ஞானாசாரியாருக்கு மாணாக்க ரானார்.

வேதாகமமான உபநிடதப் பொருளைக்கொண்ட பாடல் களை அருளிச் செய்தார். ஞானாசாரியார் அவற்றையெல் லாம் கேட்டு அப்பாடல்களில் மிகுந்த நேசங் கொண்ட வராய், "அன்பனே சிறிது காரியமுண்டு; நீ இங்கே இரு" என்று கூறி, அடியார்களுடனே தமது திருவுரு மறைந் தருளினார்.

## ஆலயத் திருப்பணி

கனவில் தோன்றும் பொருள் போலக் கடவுள் தமது கிருபா சொரூபத்தைக் காட்டி மறைந்தவுடனே வாத வூரடிகள் கலக்கமுற்றார். இதென்ன நனவோ கனவோ என மயங்கினார். மனந்தேறி, "எம்பெருமானே! உம் முடைய அடியார் திருக்கூட்டத்தில் என்னைக் கூட்டிக் கொள்ளாமல் என்னையும் என் வினையையும் விட்டுப் போனீரோ? சுவாமி உம்மைப் பிரிந்திருக்கக் கூடவில்லை. நான் என்ன செய்வேன்?" என்று புரண்டழுதார்.

கோபுர வாயிலின் புறத்தே போய், அங்குத் திரண்டு நின்ற பாண்டியன் சேனைகளைப் பார்த்து, "நீங்கள் முன்னே போய்ப் பாண்டியனுக்கு ஆறு மாதம் கப்பலில் குதிரைகள் வந்து இறங்குமென்று சொல்லுங்கள்" என்று சொல்லியனுப்பினார். வாதவூரடிகள் திருப்பெருந்துறையில் தங்கியிருந்தார். குதிரை வீரர்களும், தேர் வீரர்களும் மதுரைக்குப் போய், பாண்டியனை வணங்கி உள்ளத்தைச் சொன்னார்கள். அது கேட்டுக் குதிரைகள் மெய்யாகவே வருமென்று பாண்டியன் ஒன்றும் பேசாமல் இருந்தான்.

வாதவூரடிகள் பாண்டியன் குதிரை வாங்கக் கொடுத்த பொருள்களை எல்லாம் திருப்பெருந்துறையிலுள்ள

அந்தணர்களுக்கு மனத்தில் அன்பு பெருகுமுன்னே வேண்டிய மட்டும் கொடுத்துப் பின்பு கடவுள் பூசைக்கும் திருவிழாச் சிறப்புக்கும் செல்வ நிறைந்த திருக்கோயில் திருப்பணிகளுக்கும் நிரம்பக் கொடுத்தார். சிவனடியார் களுக்கும் கொடுத்தார். திருப்பெருந் துறையில் இருந்து கொண்டு இவ்வாறு உலகத்தாசை தீரக் காலங்கழித்துக் கொண்டிருந்தார்.

பாண்டியன், வாதவூர் அடிகள் சொல்லியனுப்பின கெடு வின்படி ஆடி மாதம் வந்தவுடனே, இன்னமும் குதிரைகள் வரவில்லையென்று வாதவூரடிகளான தன் மந்திரிக்கு ஓலை எழுதி அனுப்பினான். ஓலை வந்தது. வாதவூரடிகள் திரு முகத்தை வாங்கி, அதிலுள்ள செய்திகளைப் படித்து அறித்தார். இனி என்ன செய்வோமென்று சோர்ந்து நின்றார். திருக்கோயிலுக்குப் போய், "என் நாயகனே! ஏறுகொடி உயர்ந்த மன்னா! தென்னா! பெருந்துறையின் மணியே! பாண்டியன் கொடுத்த பொருள்களையெல்லாம் உன் ஆலயத்துக்கும் உன் அடியார்களுக்குமே செலவு செய்யும்படியான புத்தியைக் கொடுத்தாய்; இனி அந்தப் பாண்டியனுக்கு நான் எப்படிக் குதிரைகளைக் கொண்டு போய் செலுத்துவேன்" என்று வணங்கியெழுந்து துதித்து வேண்டினார்.

அப்போது திருப்பெருந்துறைக் கடவுள் அசரீரியாக, "ஓய்! மந்திரியாரே! பாண்டியனுக்குக் குதிரைகள் எப்படியும் வந்து சேருமென்று ஓலை எழுதியனுப்பும்" என்று அருளினார். வாதவூரடிகள் மகிழ்ந்து அப்படியே ஓலை எழுதி அனுப்பினார். அந்த ஓலையைப் பார்த்து மன்னனும் மகிழ்ந்தான்.

அன்றிரவு வாதவூரடிகளின் கனவில், வெள்ளியம்பலக் கடவுள் குருந்த மரத்தடியில் தோன்றிய ஆசாரிய வடிவங் கொண்டு எழுந்தருளி, "ஓய், வாதவூரரே! நாம் பாண்டியன்

குதிரைகளைப் பின்னே கொண்டு வருகிறோம்! நீர் முன்னே மதுரைக்குப் போம்'' என்று அருளிச் செய்தார். உடனே வாதவூர் அடிகள் எழுந்திருந்து, 'தேவர்களும் காண முடியாத கிருபா சொரூபம் நமக்கு நனவிலும் கனவிலும் எளிதாயிற்று அல்லவோ' என்று எண்ணி மகிழ்ந்தார் காலையில் சூரியன் உதயமானான்.

விடிந்தவுடன் வாதவூரடிகள் எழுந்திருந்து திருப்பெருந் துறைக் கடவுளை வணங்கிக் கொண்டு, இனிப் பிறப்பில். அழுந்தாதவராய் வழிக்கொண்டு நடந்து மதுரை வந்தடைந்தார். அரண்மனைக்குச் சென்று பாண்டியனைக் கண்டார். மன்னன் அமைச்சரைப் பார்த்து, ''எவ்வளவு பொருள் கொண்டு போயினீர்? எவ்வளவு குதிரைகள் வாங்கினீர்?'' என்று கேட்டான். அதற்கு வாதவூரடிகள், ''பாண்டிய மன்னனே! கொண்டு போன பொருளின் கணக்கும் வாங்கின குதிரைகளின் கணக்கும் குதிரைகள் வந்த பின்பு தெரிந்து கொள்ளலாம். இனிவரும் குதிரைகளால் துரங்கபதி என்று பெயர் பெறுவீர்'' என்றார்.

அது கேட்ட பாண்டியன் மகிழ்ந்து மந்திரிக்குச் சிறப்புச் செய்து அனுப்பினான். அடிகள் கோயிலுக்குச் சென்று பொற்றாமரைக் குளத்தில் நீராடி, இறைவனை வணங்கிய பிறகு தம் இருப்பிடம் சென்றார். உற்றார் உறவினர் கூட்டமாய்க் கூடிவிட்டனர் ''ஐயா! அமைச்சர் தொழில் செய்வது பிராமண தருமம் அன்று; அப்படி ஒப்புக் கொண்டால் அரசன் மனதுக்கு ஏற்றவாறு செய்யவேண்டும். நீர் செய்வது ஒன்றும் நன்றானதாயில்லை. இன்றைக்கும் குதிரைகள் வருவதாகக் கெடுச் சொன்னீரே, சொன்ன படியே குதிரைகள் வரவேண்டுமல்லவா? அப்படிக் குதிரைகள் வந்து சேராவிட்டால் நாளைக்கு என்ன சொல்லுவீர்? கருத்தில்லாதவராய் இருக்கின்றீர்'' என்றார்கள்.

வாதவூரடிகள், ''நான் உலகப் பற்றுக்களைத் துறந்து விட்டேன். எனக்கு உற்றார் உறவினரெல்லாம் இறைவனே.

எனக்கு இனி எதைப் பற்றியும் கவலையில்லை. அரசன் தண்டித்தாலும் ஏற்றுக் கொள்ளுகிறேன். சிவனை மறக்க மாட்டேன். பழவினைப் பயனை யார்தான் விலக்கிக் கொள்வார்கள்?'' என்று அவர்களுக்குப் பதிலிறுத்தார்.

**நரி பரியாகியது**

மறுநாள் பாண்டியன் அடிகளை அழைத்து, "ஏன் இன்னும் குதிரைகள் வரவில்லை?'' என்று வினவினான். அதற்கு மறுமொழியாக அடிகள், "இன்று முதல் மூன்று நாளைக்குள் குதிரைகள் வந்து சேரும். அப்படி வருகிற குதிரைகளுக்கு வேறே பெரிய லாயங்கள் கட்ட வேண்டும். தண்ணீர் குடிக்க தொட்டிகள் கட்ட வேண்டும்'' என்றார் அவ்வாறே ஏற்பாடுகளைச் செய்யுமாறு அரசன் உத்தர விட்டான்.

மூன்று நாட்களும் கழிந்தன. குதிரைகள் வராமையால் மன்னன் கடுங்கோபங் கொண்டான். ஏவலரை அழைத்து அவரைத் தண்டிக்க உத்தரவிட்டான். தண்ட வீரர்கள், "ஓ மந்திரியாரே பணத்துக்கு வகை சொல்லும்'' என்று நிற்க வைத்துத் தலை மேல் பெரிய கல்லைச் சுமைக்க வைத்து வாதித்தனர். வாதவூரடிகள் சோம சுந்தரக் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துத் தலைமேல் ஏற்றிய கல்லுச் சுமையைச் சுமந்து கொண்டு நின்றார். இறைவன் பாரதத்தைத் தாம் ஏற்றுக் கொண்டார். இந்தத் துன்பத்தைக் காணமாட்டாதவன் போல் சூரியன் மேற்குக் கடலில் மறைந்தான்.

மறுநாட் காலையில் கோயிலில் எழுந்த மணிச் சத்தமும் திருப்பள்ளி எழுச்சிப் பாடலும் அடிகளின் காதுகளில் ஒலித்தன. இறைவனை வேண்டி முறையிட்டார். இவருடைய துன்பத்தைப் போக்க இறைவன் திருவுளங் கொண்டார். நந்தி தேவர் முதலான கணாதிபர்களை அழைத்து, "இன்று ஆவணி மூல நட்சத்திரம்; பாண்டின் மிகவும்

கோபம் கொள்ளுமுன்னே அவனுக்குள்ள குதிரைகளைச் செலுத்த வேண்டும். ஆகையால் நீங்கள் எல்லோரும் காட்டில் வாழும் நரிகளைச் சேர்த்துக் குதிரைகளாக்கி, அந்தக் குதிரைகளை நடத்தும் வீரர்களாகி நீங்கள் முன்னே செல்லுங்கள். நாமும் உங்கள் பின்னே ஒரு குதிரை வீரனாய் திருவுருவங்கொண்டு வருகிறோம்" என்று விடை கொடுத்தார்.

இறைவன் கட்டளையைச் சிரமேற்கொண்டு கணாதிபர்கள் காடுகளிலுள்ள நரிகளையெல்லாம் திரட்டி விரைந்து செல்லும் குதிரைகளாகச் செய்து, அந்தக் குதிரை களை நடத்துகின்ற பாகர்கள் ஆனார்கள்.

அதே போல் இறைவன் வேதக் குதிரையின் மேல் இவர்ந்து அவர்களோடு வந்தார். குதிரைகள் கிளம்பின. தூசிகள் ஆகாயத்தை மறைத்தன. வாத்திய முழக்கமும் குதிரைகளின் ஒலியும், வீரர்கள் சத்தமும் திசைகள் செவிடுபட எழுந்தன. இதைக் கண்டவர்கள் விரைந்து ஓடி வந்து வாதவூரடிகளுக்குத் தெரிவித்தனர்.

மன்னர்க்கும் செய்தி எட்டியது. அவனும் மன மகிழ்ந்து தலை வாயிலுக்கு வந்தான். மணி மண்டபத்தில் இருந்த சிங்காதனத்தில் அமர்ந்தான். பெண்கள் சாமரம் வீசினர். பெரியோர்கள் வந்து சூழ்ந்தனர். சின்னம், காளம், காகளம் முதலியவை ஒலிக்கும் ஓசை வந்து புகுந்தது. செந்தூள் படலங்கள் திசைகளை மறைத்தன.

இருட் படலத்தைக் கிழித்துக் கொண்டு உதயமாகிற சூரியர்களைப் போலச் சிறந்த திருமேனி கொண்ட பாகர்களுடனே கடல் நுரை போல வாய் நுரை தோன்ற மாயக் குதிரைகள் எல்லாம் வந்தன. பாண்டியன் கண்டு அதிசயித்தான். பாகர்களுக்குத் தலைவராக வந்த சோம சுந்தரக் கடவுள், "ஓ பாண்டிய மன்னனே! எங்களுடைய குதிரை ஏற்றத்தைக் கொஞ்சம் பார்ப்பாயாக" என்று

சொல்லி ஐந்து கதியும், பதினெட்டு சாரியும் ஆகிய விசித்திர வேறு பாடுகள் தோன்றத் தம் இச்சையால் குதிரையை நடத்திக் காட்டினார். அவ்வாறே மற்றக் கணாதிபர்களும் தனித்தனியே தங்கள் குதிரைகளை நடத்திக் காட்டினர்.

பாண்டியன் அவர்களைப் பார்த்து மகிழ்ந்தான். தலைவனாகிய இறைவனைக் கண்டு வணங்கினான். இறைவனாகிய பரிமேலழகர் பாண்டியனைப் பார்த்து, "ஓ பாண்டிய மகாராஜனே! உன்னுடைய திரவியத்தைக் கொண்டு வந்து, உன் சொல் தவறாத மந்திரியானவர் எனக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் நிரம்பக் கொடுத்தனால், இந்தக் குதிரைகளைக் கொண்டு வந்தோம், இவை தேவர்களுக்கே அல்லாமல் மனிதர்களுக்குக் கிடைக்கத் தக்கனவல்ல. எல்லா லட்சணங்களும் பொருந்தியவை. குதிரை விற்கும் வர்த்தகத்தைச் சொல்லக் கேளும். இந்தக் குதிரைகளை என்னிடத்தில் இன்று கயிறுமாறி உம்முடையனவாகக் கொள்ளுகிறதனால் இந்தக் குதிரைகள் நாளைக்கு எப்படியானாலும் எனக்கும் உமக்கும் யாதொரு வழக்கும் பேசக்கூடாது. இதுவே குதிரை விற்கும் நியாயம்" என்று சொன்னார்.

அது கேட்ட பாண்டியன் மனமகிழ்ந்து அதற்குச் சம்மதித்தான். பரிமேலழகராகிய சோம சுந்தரக் கடவுள் காட்டின குதிரைக்குப் பாண்டியன் முத்து மாலை, சதங்கை, சிலம்புகளால் அலங்காரஞ் செய்து, நல்ல பூமாலையும் சந்தனமும் அணிந்து தூபதீபங் கொடுத்துப் பக்தியுடன் வணங்கி எதிரே நின்றான். குதிரை வீரனாக வந்துள்ள இறைவர், திரு ஆலவாய்ப் பரமனைப் பார்த்துத் தமது கைகளைத் தலைக்கு மேல் குவித்து வாழி வாழியென்று குதிரையைக் கொடுத்து கயிறுமாறி, தான் ஏறி வந்த குதிரை ஒன்று தவிர மற்றைக் குதிரைகளை எல்லாம் கொடுத்தார். பாண்டியன் வாங்கிக் குதிரை வீரர்களிடம் தர அவர்கள் லாயத்தில் கட்டினார்கள்.

பின்பு குதிரை வர்த்தகரான கடவுளுக்குப் பாண்டியன் நல்ல வெகுமானங்களை அளித்தான். பரிமேலழகரும் குதிரை வீரர்களும் பரிசுப் பொருள்களைப் பெற்றுக்கொண்டு சென்றார்கள். அரசன் வாதவூரடிகளுக்குச் சிறப்புச் செய்த பின்னர் அரண்மனைக்குச் சென்றான்.

## பரி நரியாகியது

வாதவூரடிகள் தம் திருமனைக்குச் சென்றார். உற்றார் உறவினர் கூடி மகிழ்ச்சி ஆரவாரஞ் செய்தனர். அடிகள் இறைவனது பேரருள் திறத்தை எண்ணி எண்ணி மனமுருகினார். திருவடிகளைத் தியானித்தார். அன்றிரவு இறைவனைச் சிந்தித்தபடியே கண்ணுறங்கினார்.

அன்றிரவு பாண்டியன் லாயத்தில் கட்டப்பட்டிருந்த மாயக் குதிரைகள் எல்லாம் திருவாலவாய்க் கடவுள் திருவிளையாடலால் முன்முள்ள தங்கள் நரி வடிவங்கொண்டன. குறு நரிக் கூட்டங்கள் கால்களில் கட்டிய கயிற்றுடனே முளைகளைப் பிடுங்கிக் கொண்டு ஓடிப் போகும் வழிபார்த்து ஊளையிட்டெழுந்தன. குதிரை லாயத்தில் முன்னுள்ள குதிரைகளின் மேல் பாய்ந்து அவைகளைக் கடித்து இரத்தத்தைக் குடித்தன. முன்னிருந்த குதிரைகள் பயந்தோடின. இந்தச் சத்தங் கேட்டுக் காவலாளிகள் திடுக்கிட்டெழுந்தனர். நரிகள்வேலிகளைத் தாண்டி ஓடின. சில நரிகள் காவலாளிகளையும் கடித்தன. ஊளையிட்டு எங்கும் அலைந்தன. ஊர் மக்களும் திடுக்கிட்டெழுந்தனர். இந்த அலங்கோலத்தைக் கண்டு அனைவரும் அஞ்சினர். பொழுது விடிவதற்குள் நரிகள் காடு போய்ச் சேர்ந்தன.

அரிமர்த்தன பாண்டியன் செய்தி அறிந்து, கடுங்கோபங் கொண்டான். அடிகளை அழைத்து வரச் செய்து, "ஓய் வாதவூரரே! நீர் என்னுடைய பொருள்களைக் கொண்டு போய் இந்தத் துரோகக் காரியத்தைச் செய்துள்ளீர். உமக்கு இது நியாயமா? என்று கடிந்துரைத்தான். சினங் கொண்டு

சேவர்களைக் கூவி, "நீங்கள் இவரைக் கொண்டு போய் தண்டித்து என் பொருள் முழுவதும் வாங்குங்கள்" என்றான்.

வாதவூரடிகள் சோமசுந்தரக் கடவுளை நினைத் தழுதார்; துதித்தார். இக்குரலைக் கேட்ட சோமசுந்தரக் கடவுள், வைகையாற்றைப் பார்த்து, "நீ கண்ட யுகத்தில் வரும் கடல் போலக் கண்டோரெல்லாம் அதிசயமடையப் பெருகி வரக்கடவாய்" என்றார். வைகறையாறு கம்பா நதிபோல வேகங் கொண்டு கரைகள் உடையவும் மரங்கள் குலை முறிந்து வீழவும் மோதி, விளை நிலங்களை அழித்து, முத்துக்களை வீசி, வாழைத் தோட்டங்களைச் சாய்த்துக் கொண்டு பெருகி வந்தது.

மதுரைக்குள்ளும் வெள்ளம் பெருகியது. வீடுகள் இடிந்தன; வீதிகள் ஆறுபோல் காட்சியளித்தன; கடை வீதிகளிலும், மன்றங்களிலும் அலைகள் மோதின; மக்கள் பயந்து நாலா பக்கங்களிலும் ஓடினர்; எல்லாரும் கலங் கினர்.

**மண் சுமந்தது**

வைகையாற்று வெள்ளத்தில் மதுரை மூழ்கிக் கிடப்ப தைக் கண்ட பாண்டியன் மந்திரிகளை அழைத்து, "நீங்கள் போய்க் கரையைக் கட்டி ஒதுக்கிப் பெருகி வருகிற வெள்ளத்தின் வேகத்தை அடக்குங்கள்" என்று உத்தரவிட் டான். அவ்வாறே மந்திரிகள் போய் தனித்தனியே குடி களுக்கெல்லாம் பெயர் கண்டு எழுதி ஒவ்வொருவரும் கரை கட்ட வேண்டுமென்று கோல் போட்டு அளந்து அடை யாளஞ் செய்து பங்கு பிரித்து விட்டனர். நகரத்தில் பறை யடித்துக் கரை கட்டும் வேலையில் ஈடுபட்டனர்.

ஆற்றங்கரையில் அனைவரும் கூடி அவர்களுக்கு அளந்துவிட்ட பகுதியை அடைக்கலாயினர். மதுரைத் தென் கீழ்த்திசையில் இருக்கிற வந்தி என்னும் மூதாட்டியின்

பங்கை அடைக்க ஆள் வரவில்லை. அவள் பிட்டு விற்று ஜீவனம் செய்பவள். பரம ஏழை. பாண்டியன் தண்டிப்பானே என்று வருந்தினாள். "கூலியாளாய் வேலை செய்கிறவர்கள்ஒருவரையும் கண்டிலேன் நான்; என்னசெய்வேன்? யாரேனும் கூலியாளாக வருவாருண்டோ?" என்று கதறினாள்.

ஞானமே வடிவான இறைவன் அழுக்குப் பிடிக்த பழந் துணியை அரையில் தரித்துக் கொண்டு, சும்மாட்டின் மேல் கூடையைக் கவிழ்த்து, தோளில் மண்வெட்டியை மாட்டிக் கொண்டு, பசியுடையவராய் வீதி வழியே நடந்து, "யாராயினும் கூலிக்கு வேலை கொள்வாருண்டோ?" என்று கூவிக் கொண்டு வந்தார். வந்த கூலியாளை அழைத்து, "அப்பா நீ எனக்கு அளந்துவிட்ட கரையை அடைத்துத் தருவாயோ?" என்று கேட்டாள்.

கூலியாளாக வந்த இறைவன், "தாயே நான் போய் அடைக்கிறேன். அதற்குக் கூலி என்ன கொடுக்கிறாய்?" என்றான். "பிட்டுத் தருகிறேன்" என்றாள் கிழவி. கூலியாள் அதற்குச் சம்மதித்து, "தாயே! நான் இப்போது அதிக பசியுள்ளவனாய் இருக்கிறேன். உதிர்ந்த பிட்டை இப்போது உண்ணக் கொடு. அவற்றை உண்டு இளைப் பாறின பிறகு போய் உனக்கு அளந்து விட்ட கரையை அடைத்து வருகிறேன்" என்றார்.

கிழவி சம்மதித்து உதிர்ந்த பிட்டுக்களைக் கொடுத்தாள். கூலியாளாக வந்தவர் மேல் துண்டை விரித்து வாங்கி, நன்றாய் இருக்கிறதென்று அமுது செய்தார். பிறகு அங்கிருந்து புறப்பட்டு ஆற்றங்கரைக்குச் சென்றார். சென்றவர் சரிவர வேலை செய்யாமல் ஒரு மர நிழலில் படுத்துறங்கினார்.

வேலை வாங்குகிற வீரர்கள் மேற்பார்வை செய்து கொண்டு வரும்போது, வந்தியின் பங்கு அடைபடாமல்

இருப்பதைக் கண்டனர். இச்செய்தி மன்னனுக்கு எட்டியது. மன்னன் வைகை யாற்றங்கரைக்கு வந்தான். கட்டின கரைகளைப் பார்வையிட்டான். வந்தியின் பங்கு அடைபடாமல் இருப்பதையும் அதன் வழியாக வெள்ளம் பெருகி, பக்கத்தில் கட்டிய கரைகளை இடித்துக் கொண்டு போவதையும் பார்த்தான். சினங்கொண்டான்.

சேவகர்கள் கூலியாளைப் பிடித்து இழுத்து வந்து மன்னன் முன் நிறுத்தினர். பாண்டியன் கண்டு கோபித்துத் தன் கையிலிருந்த பொற் பிரம்பினால் அண்டங்களையும் அளவில்லாத உயிர்களையும் தனக்குச் சரீரமாகக் கொண்ட கடவுள் முதுகில் ஓங்கி யடித்தான்.

அடித்த உடனே நிறைந்த சோதியான கடவுள் தாம் எடுத்துக் கொண்டு வந்த கூடையோடு மண்ணை ஆற்றின் உடைப்பில் கொட்டி விட்டு மறைந்தருளினார். எல்லா உயிர்களுக்கும் ஞான வடிவமான கடவுளின் முதுகில் பாண்டியன் அடித்த அடி பாண்டியன் முதுகிலும் எல்லா ஜீவராசிகளின் முதுகிலும்பட்டது. தழும்பை ஒருவருக்கொருவர் காட்டி பட்ட விதம் தெரியாமல் மயங்கினார்கள்.

"ஓய் பாண்டிய ராஜனே! வாதவூரன் உன் பொருள்களை எனக்கும் என் அடியார்களுக்கும் உதவும்படிச் செய்தான். நீ அவனைத் தெரிந்து கொள்ளாமல் துன்பப் படுத்தியதால் நரிகளைக் குதிரைகளாக்கிக் கொண்டு வந்து கொடுத்தோம். அவைகள் இரவில் பழையபடி நரிகளாயின. அது கண்டு நீ பின்னும் வாதவூரனை நெருக்கி வருத்தப் படுத்தினாய். நாம் அது பொறாமல் வைகையாற்றைப் பெருகி வரச் செய்தோம். வந்திக்குக் கூலியாளாய் அவள் கொடுத்த பிட்டை வாங்கித் தின்று வேலையில் உன்னால் பிரம்படியும் பட்டோம். வந்தியின் பங்கு அடைபட நாமே மண்ணைக் கொட்டிக் கரையைச் சரிப்படுத்தி, அவள் சிவ லோகம் சேரவும் செய்தோம். நீ இந்த வைதீக சிரேஷ்டனுடைய பெருமைகளைத் தெரிந்து கொள்ளவில்லை. இந்த

வாதவூரன் பொருட்டாகவே நாம் இவ்வளவும் செய்தோம். உனக்கு இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் அளித்தவன் அவனே'' என்று ஓர் அசரீரி எழுந்தது.

பாண்டியன் மகிழ்ந்தான், அதிசயித்தான். வாதவூரரை அழைத்து வரச் செய்து அவரை வணங்கி, ''ஐயா! நான் தங்கள் மீது கோபங்கொண்டு அறியாமல் செய்த குற்றங்களையெல்லாம் மன்னித்தருள வேண்டுகிறேன். முன்போலவே தாங்கள் அமைச்சர் பதவியை ஏற்று அருள வேண்டும்'' என்று வேண்டினான்.

மண்ணாசை நீங்கின வாதவூரடிகள் உள்ளே நகைத்து, ''ஐயா, பாண்டிய மகாராஜனே! இந்திரன் போல நீயே நாட்டை அரசாட்சி செய்யக் கடவீர். நான் உம்மை அடுத்திருந்த படியால் வைதீக தர்மமும் நன்றாய்த் தெளியலானேன். இதனால் மெய்ம்மையாம் சித்த சுத்தி விளைந்தது. அதனால் பரமசிவனுடைய பக்தி தோன்றிற்று. மாயையின் விருத்தியான பந்தமாம் பிரபஞ்ச வாழ்க்கை விளைவின் உட்பட்ட துன்பம் வெந்தது. கருணையாகிய மெய்யுணர்வும் இன்பம் தன்னைத் தந்தது; பாதஞ்சூட்டித் தன் மயமாக்கிற்று'' என்றார்.

''வேதப்பொருளை அருளிச் செய்த சோமசுந்தரக் கடவுள் தமது அருளினால் ஞான மயமான பொன்னம்பலத்தையுடைய தில்லை மூதூருக்கும் போகும்படி எனக்கு அனுக்கிரகம் செய்தருளினார். ஆகையால் நான் தில்லை மூதூருக்கும் போகும்படி நீரும் அனுமதி தர வேண்டும்'' என்று வேண்டினார். அவனும் பிரியா விடை தந்தான்.

### தலங்களைத் தரிசித்தது

மாணிக்கவாசகர் மதுரை நகரை விட்டு நீங்கி, தவ வேடங்கொண்டு திருப்பெருந்துறைக்குச் சென்றார். இறைவனை வணங்கிச் சிறிது காலம் அங்குத் தங்கியிருந்தார். பிறகு உத்திரகோச மங்கை, திரிவிடை மருதூர், திருவாரூர்,

சீகாழி, திருக்கழுக்குன்றம், விருத்தாசலம், திருவெண்ணெய் நல்லூர், திருவண்ணாமலை, காஞ்சி மாநகர், முதலிய தலங்களைத் தரிசித்துக் கொண்டு தில்லை மாநகர் வந்து சேர்ந்தார்.

## ஊமைப் பெண்ணைப் பேச வைத்தது

திருவாதவூரர் பல தலங்களையும் தரிசித்து விட்டு, தில்லை மூதூரில் ஒரு தவச்சாலை அமைத்துக் கொண்டு, இறைவனை வழிபட்டுக் கொண்டிருந்தார். ஒரு சமயம் அவர் ஈழ நாட்டை அடைந்தார். எப்பொழுதும் தில்லை மன்றத்தைப் பற்றிய நினைவாகவே இருந்தார். ஈழ மன்னனுக்கும் அது பற்றிக் கூறினார். ஞானத்திலும் தவத்திலும் சிறந்தவர்கள் தில்லை ஆனந்தக் கூத்தினைக் காண வருமாறு ஓலை வந்தது. அது கேட்டு ஈழ அரசனும் தன் ஊமைப் பெண்ணை அழைத்துக் கொண்டு வந்திருந்தான்.

அடியார்கள் கூடியுள்ள கூட்டத்தில் சோழன் வாதவூரரை வணங்கி, 'சைவ சமயத்தை நிலை நிறுத்துவது அடிகள் கடமை, புத்தரை வெல்லுதல் என் கடமை' என்று கூறினான். புத்தகுரு தன் பௌத்த சமயமே உயர்ந்தது என்று வாதவூரரிடம் வாதிட்டார். கண் இல்லாதவனுக்குக் கதிரவன் ஒளியைக் காட்ட முடியுமா? புத்தகுரு திரிபிடகம் என்ற நூலினை ஓதினார். அதற்கு வாதவூரரும் சிவபெருமானது குஞ்சித பாத நடனத்தையும் திருநீற்றின் பெருமையையும் எடுத்துக் கூறினார். (குஞ்சித பாதம் — தூக்கிய திருவடி).

பின் வாதவூரர், "இந்தக் கீழ் மக்கள் நாவை விட்டு கலைமகளே அகல்வாயாக" என்று கூறியருளினார். புத்த சமயத்தோர் ஊமைகள் ஆயினர். வியப்புற்ற ஈழமன்னன், "என் மகள் பிறவி முதல் ஊமை; அவளைப் பேசவைத்தால் நான் உமக்கு அடிமை யாவேன்" என்று கூறினான். வாதவூரரும், "பெண்ணே, புத்தன் கேட்கும் கேள்விகளுக்கெல்

லாம் விடைகூறுக" என்று கூறியருளினார். அதன் வாயிலாகத் 'திருச்சாழல்' பதிகம் பாடினார். புத்தர்கள் அனைவரையும் பேச வைத்தார். சைவமே உயர்ந்தது என்பதனை நிலை நாட்டினார்.

### திருவாசகம் பாடியது

இவ்வாறு மாணிக்கவாசகர் தில்லையில் வாழ்ந்து வரும் நாளில் தில்லைக் கூத்தன் அந்தணர் வடிவங்கொண்டு மாணிக்க வாசகரிடம் சென்று பல தலங்களிலும் பாடியுள்ள பாடல்களை ஓதச் செய்தார்.

'நமச்சிவாய வாழ்க' என்பது முதலாக ஓதினார். அந்தணர் அதைத் தமது சுவடியில் எழுதிக் கொண்டார். அதைக் கேட்டு மகிழ்ந்து, 'பாவை பாடிய வாயால் ஒரு கோவை பாடுக' என்று கேட்டார், வாதவூரர் திருக்கோவையாரைப் பாட ஆரம்பித்தார். இறைவன் அதையும் கேட்டுச் சுவடியில் எழுதி, 'மணிவாசகன் சொல்லச் சிற்றம்பலத்தின் கையெழுத்து' எனக் கையொப்பமிட்டுச் சுவடியுடன் மறைந்தார்.

மறைந்தவர் கூத்தப்பெருமானே என அறிந்த மாணிக்க வாசகர், பெருமானின் பெருங்கருணைத் திறத்தை வியந்து போற்றினார். மறைந்த இறைவன் சுவடியைச் சிற்சபையிலுள்ள பஞ்சாட்சரப் படியில் வைத்தார். மறுநாட் காலையில் பஞ்சாட்சரப் படியில் சுவடியைக் கண்ட தில்லை வாழ் அந்தணர்கள் அதிசயித்தனர். சுவடியின் முடிவில், நடராஜப் பெருமான் கையொப்பம் இருக்கக் கண்டு வியப்புற்றனர். மணிவாசகரிடம் சார்ந்தனர். சுவடியின் விவரம் அறிவித்தனர். அதில் உள்ள பாடல்களுக்குப் பொருள் உரைக்க வேண்டினர். தாம் சிவப்பேற்றிற்கு உரியவராய் இருப்பதை உணர்ந்த மணிவாசகர் தில்லை வாழ் அந்தணர்களுடன் சிற்சபேசன் கோயிலைக் குறுகினார். இத்திருவாசகத்திற்கு வாச்சியம் (பொருள்) கூத்தப் பெருமானின்

குஞ்சித சரணமே எனக் காட்டி அச்சரண ஒளியிலே தாமும் இரண்டறக் கலந்தார்.

## இவருடைய வேறு பெயர்கள்

1. ஆண்டவன் அடிமை முறையில் நின்றமையாலும் துறவு பூண்டமையாலும் 'ஆளுடைய அடிகள்' என்றும் பெயர் பெற்றார்.

2. ஆளுடைய அடிகளின் பெருமையைக் கேட்டுணர்ந்த அரிமர்த்தன பாண்டியன் இவரை முதலமைச்சராக்கிக் கொண்டான். சில நாட்களில் அவரது திறமையை உணர்ந்த மன்னவன் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தான். ஆடை, பூண், கவிகை, தண்டு, யானை முதலியவற்றையும் கொடுத்தான்.

மாணிக்கவாசகரின் வயது 32 ஆண்டுகள். இவர் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். சேக்கிழார் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். அதனால்தான் அவர் எழுதிய பெரிய புராணத்தில் மாணிக்கவாசகரைப் பற்றிய வரலாறு இடம் பெறவில்லை.

## பாராட்டுரைகள்

சிவப்பிரகாச சுவாமிகள் தொண்டை நன்னாட்டுச் சான்றோர்களுள் ஒருவர். அவர் பாடிய பாடல்களுள் நால்வர் நான்மணி மாலை குறிப்பிடத்தக்கது. அவர் சைவ சமயக் குரவர்கள் நால்வரைப் பற்றி வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தம், ஆசிரியப்பா என்னும் நால்வகைப் பாக்களால் இந்நூலைப் பாடியுள்ளார். அந்நூல் அந்தாதித் தொடையில் அமைந்தது. இவருக்கு மாணிக்கவாசகர் பால் மிக்க ஈடுபாடு உண்டு.

சிவப்பிரகாசர் வீர சைவ மடத்தைச் சேர்ந்தவர். திருவாசகத்தை வீர சைவ மதத்தவர் பெரிதும் போற்றுவர்.

சிவப்பிரகாசர் 4ஆம் பாடலில் அடியிற் கண்டவாறு தம் கருத்தைக் கூறியுள்ளார்.

வேதங்கள் இறைவன் திருவாய் மலர்ந்தருளியவை. திருவாசகமோ மாணிக்கவாசகரால் பாடப் பெற்றது. இவ்விரண்டனுள் எது சிறந்தது என்றால், 'வேதத்தை ஓதின் கண்ணீர் பெருக்கி, நெஞ்சம் நெக்குருகி நிற்பவர் களைக் கண்டதில்லை. ஆனால் திருவாசகத்தை ஒரு கால் ஓதின் கருங்கல் மனமும் நெகிழ்ந்து, கண்கள் மணற்கேணி போல் நீர் சுரக்க, மெய்ம்மயிர் பொடிப்ப அன்பர் ஆவரே யன்றி வேறு வகையானோர் உலகில் இல்லை' என்று கூறுகின்றார்.

மேலும் மேற்படி நால்வர் நான்மணி மாலையில் மாணிக்கவாசகரைப் பற்றிய பத்து அகவற்பாக்களின் கருத்து வருமாறு :

1. ஆரண மொழியினும் வாசகத் தேனே சிறந்தது.

2. வாசகத்துக்கு வாச்சியம் வேய்த்தோள் இடத் தவனே.

3. மதுரை மாநகரிற் குதிரை மாறியும், விண் புகழ் முடியில் மண்பொறை சுமந்தும், நீற்றெழில் மேனியில் மாற்றடி பட்டும், வாதவூரரைப் பாடும் பணியை மேற் கொள்ளுமாறு செய்தது.

4. எருது ஏறியைப் பரிமாமிசை வரப் பண்ணியது.

5. திருவாசகத்தைச் சிவபெருமானே தம் கையால் எழுதிக் கொண்டது.

6. திருவாசகம் கேட்போருக்கும் வீடு பேற்றை அளிக்கவல்லது.

7. திருவாசகம் பொற்கலம் போன்றது.

8. பா எனப்படுவது திருவாசகமே என்பது போன்ற செய்திகளை எடுத்துக் காட்டுகின்றன.

இராமலிங்க சுவாமிகள் 'ஆளுடைய அடிகள் அருள் மாலை' என்ற பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். அதில் ஏழாம் பாடல் வருமாறு :

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ்
சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.

டாக்டர் ஜி. யூ. போப் என்னும் மேலை நாட்டறிஞர் இந் நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

திருவாதவூரடிகள் திருவடிகள் வாழ்க!

# திருவாசகம்

## எட்டாம் திருமுறை

**நூற் சிறப்பு**

திருவாசகம் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாவதாக விளங்குகிறது. இது மாணிக்கவாசகரால் அருளிச் செய்யப்பட்டது. இந்நூல் உருகா உள்ளத்தையும் உருக்கி, உயிர்க்குப் பசுத்துவங்கெடுத்துப் பதித்துவம் அருள வல்லது. ஆதலால் இது செந்தமிழுக்கு அன்பு மறையாய்ப் போற்றப் பெறுகின்றது.

திருவாசகம் என்ற பெயர் திருவுடைய சொற்களால் ஆகிய அருள் நூல் எனப் பொருள்படும். திருவாசகத்தைத் தேன் எனக் கூறுதல் மரபு. தேன் உடற்பிணிக்கு மருந்தா தல் போல் இந்நூல் உயிர்ப் பிணிக்கு மருந்தாகும்.

தொல்லை இரும்பிறவிச் சூழும் தளைநீக்கி
அல்லலறுத்(து) ஆனந்தம் ஆக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னும் தேன்.

என்பதனால் விளங்கும். ஓதுவார் உள்ளத்தை உருக வைக்கும் பேராற்றல் மிக்கது. நாடு, மொழி, இனத்தால் வேறுபட்ட வெளிநாட்டவரையும் கசிய வைக்கும். 'திருவாசகத்துக்கு உருகார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்றும் கூறுவர். சிவப்பிரகாச சுவாமிகள் தமது நால்வர்

நான்மணி மாலையில் இந்நூலைப் பத்து ஆசிரியப்பாவால் சிறப்பித்துள்ளார். அதேபோல் இராமலிங்க அடிகளும் ஆளுடைய அடிகள் அருள்மாலை என்னும் பதிகத்தில் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். டாக்டர் ஜி. யூ. போப் இந்நூலை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

**நூலின் அமைப்பு**

திருவாசகத்தின் தொடக்கத்தில் சிவ புராணம், கீர்த்தித் திருஅகவல், திருஅண்டப் பகுதி, போற்றுத் திருஅகவல் என்னும் நீண்ட அகவற்பாக்கள் அமைந்துள்ளன. இந் நான்கும் திருக்குறளின் முதல் நான்கு அதிகாரங்களைப் போல இந்நூலுக்குப் பாயிரமாக உள்ளன. அதன் பின்னர் 47 பதிகங்கள் உள்ளன. பாட்டுக்களின் மொத்த எண் 659. அவைகளைப் பற்றித் தொடர்ந்து கூறப் பெறும்.

**1. சிவ புராணம்**

எல்லாம் வல்ல முழு முதற் கடவுளாகிய சிவபெருமானது அநாதி முறைமையான பழமையினை விரித்துரைக்கிறது. பொதுவாக இவற்றை அகவல் எனக் குறிப்பிடுவது மரபாயினும் 95 அடிகளால்ஆன கலிவெண்பாட்டாகும் இது. சிவபுராணத்தின் முதற்கண் சிவ பரம்பொருளின் திருவடிகளை வாழ்த்துகிறார். அடுத்து அவற்றின் சிறப்பினை வியக்கின்றார். அதன்பின்னர் எண் வகைப் போற்றிகளால் எண் குணத்தானைப் போற்றுகின்றார். உயிர்களின் பிறப்பு வகைகள், இறைவனின் ஐந்தொழில், வணங்குவார் பெறும் பேறு இவற்றை ஆசிரியர் விளக்குகின்றார். இது திருப் பெருந்துறையில் பாடப்பட்டது.

நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்(று) அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க

வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்சகன்தன் பெய்கழல்கள் வெல்க;
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க.
— சிவபுராணம் 1-10 அடிகள்.

குறிப்பு : வா அழ்க — வாழ்க என்பது அளபெடை பெற்றுள்ளது.

'நமச்சிவாய' என்னும் ஐந்தெழுத்து வாழ்க. அந்த ஐந்தெழுத்தின் பொருளாகிய இறைவனுடைய திருவடி வாழ்க. இமைக்கும் அளவு காலம்கூட என்னுடைய நெஞ்சிலிருந்து நீங்காதவனுடைய திருவடி வாழ்க. திருப்பெருந்துறைக்குத் தலைவனாகிய உயர்ந்த மாணிக்கம் போன்றவனுடைய திருவடி வாழ்க. ஆகமப் பொருளாகி நின்று நினைத்த நெஞ்சம் தித்திப்பவனுடைய திருவடி வாழ்க. ஒன்றாக இருப்பவனும் பலவாக இருப்பவனும் ஆன இறைவனுடைய திருவடி வாழ்க; மனக் கலக்கத்தைப் போக்கி என்னை ஆட்கொண்டருளிய மகாப் பிரபுவின் உடைய திருவடி வெற்றி பெறுக. பிறவித் துன்பங்களை ஒழித்தருளுகின்ற சிவபெருமானுடைய வீரக் கழலை அணிந்த திருவடிகள் வெற்றி பெறுக.

அன்பில்லாத பிறர்க்கு வெகுதூரத்தில் இருப்பவனுடைய தாமரை போன்ற திருவடிகள் வெற்றி பெறுக. அன்போடு கைகளைக் கூப்பி வணங்குவோருடைய உள்ளத்தை மகிழ் விக்கும் இறைவனுடைய திருவடிகள் வெற்றி பெறுக. தலையால் வணங்குபவர்களை உயர்த்துகின்ற சிறப்புடைய வனது திருவடிகள் வெற்றி பெறுக.

இறைவனைக் காட்டிலும் இறைவனுடைய நாமத்திற்கு மகிமை அதிகமாதலின் 'நமசிவாய' என்னும் ஐந்தெழுத்தை முதலில் கூறி, அதன் பொருளாகிய இறைவனைப் பின்

கூறினார். மங்கலமாகிய ஐந்தெழுத்தைக் கொண்டு நூலைத் தொடங்கினார். வாழ்க—இறைவனிடத்து உள்ளன்பு மேலிட்டுப் பொங்கும்போது, அவனுக்கு என்ன தீங்கு நேருமோ என்று அடியார் அஞ்சி, மனம் கலங்கிப் பரிவினால் அவனை வாழ்த்துதல் இயல்பு. பெரியாழ்வார் திருப்பல்லாண்டு பாடியதும் இக்காரணம் பற்றியதேயாம்.

## 2. கீர்த்தித் திரு அகவல்

(இது தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

கீர்த்தித் திரு அகவல் சிவபெருமான் தன்பால் அன்புடைய மெய்யடியார்களுக்கு எளிவந்து அருள் சுரந்த புகழ்ச்செய்திகளை விரித்து உரைத்தலின் இப்பெயர் பெறுவதாயிற்று. இதற்குச் 'சிவனது திருவருட் புகழ்ச்சி முறைமை' எனக் கருத்துரைக்கப்பட்டது. 146 அடிகளில் நிலைமண்டில ஆசிரியப் பாவினால் அமைந்தது இப் பகுதி. உயிர்களின் உய்திப் பொருட்டாக இறைவன் நிகழ்த்திய திருவிளையாடல்களை இது விரித்துரைக்கின்றது. திருப்பெருந்துறையிலிருந்த தம்மைத் தில்லைக்கு வருக எனப் பெருமான் அழைத்த செய்தி இறுதியில் குறிக்கப் பெற்றது.

கீர்த்தி—புகழ்தல், பாராட்டுதல், வாழ்த்துதல் ஆகிய பல பொருள்களைக் கொண்ட ஒரு சொல்லாகும். அரசன் தன்னுடைய வெற்றியினைக் அகவலாக அமைத்து அதற்கு மெய்க்கீர்த்தி என்று பெயரிட்டுக் கொண்டான். 'சீர் நான்காகி இரண்டடித் தொடையாய்' என்று மெய்க்கீர்த்தி பாடல் தொடங்குகிறது.

இப் பகுதியில் இறைவனது ஐந்தொழில், ஆலவாய் பெருமான் கோலங்கள், அவன் அடியார்க்கருளிய பாங்கு, தெய்வத்திற்குச் சிறப்பு ஆகியவை கூறப்படுகின்றன. இப் பகுதி திருவிளையாடற் புராணத்திற்கு மூலமாக விளங்குகிறது.

கயிலையும் கயிலாயநாதனும் ஒன்றேயாம். அத்தகைய பெரிய பொருள் ஓசை வடிவினனாய் அல்லது நாத பிரம்ம

மாய் இலங்குகிறார். அவருடைய பாரமார்த்திகப் பெருநிலை ஞானக்கண் உடையார்க்கு விளங்குகிறது. பிறகு ஊனக் கண் கொண்டு பார்க்கிற அன்பர்களுக்கு அதற்கு நிகராகச் சிதம்பரம் இருக்கிறது. ஈண்டு அடியவர்களின் இடையறாத ஆராதனையின் ஆரவாரம் அனாகத தொனிக்கு அதாவது நாதப் பிரமத்தின் ஓவாத சத்தத்துக்கு நிகராகிறது. ஞான பூமிக்கு நிகராய் ஞாலத்தில் இருப்பது சிதம்பரம். இதன் துணைகொண்டு கயிலை அல்லது சிவஞான நிலையை எட்டுவது வாழ்வின் குறிக்கோள் ஆகும்.

> "இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
> பொலிதரு புலியூர் புக்கினிது அருளினன்
> ஒருதரு கைலை உயர்கிழ வோனே"
>
> அடிகள் 144—146

இவ்வடிகளின் விளக்கமே மேற்கூறப்பட்டுள்ளது என்க.

### 3. திரு அண்டப் பகுதி

(இது தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

இப் பகுதியில் சிவபெருமான் எல்லா அண்டங்களிலும் பெரியனாய் அவற்றையும் கடந்து நிற்கும் பெருநிலை பேசப்படுகின்றது. அம் முதல்வனது தூல சூக்கும நிலையை வியந்து போற்றுவதாக அமைந்துள்ளது இது. இணைக் குறள் ஆசிரியப் பாவினால் 182 அடிகளில் இது நிறைகிறது. சிவபெருமானின் பஞ்ச கிருத்தியங்களுள் அருளல் ஒழிந்த ஏனை நான்கினை இப்பகுதி விரித்துரைக்கின்றது. (ஏனை நான்கு: ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல்.)

உருண்டு திரண்டு அக்கினிக் காற்றாயிருப்பது சூரியன். அதனிடத்திருந்து சிதறி வந்து குளிர்ந்து இறுகியிருப்பது நில உலகம். அதே விதத்தில் சுத்த சைதன்யமாயிருப்பது சிவம். அந்த சிவனிடத்திருந்து ஜடசக்தி வந்துள்ளது. ஜடசக்தி பஞ்ச பூதங்களாயின. பஞ்ச பூதங்களிலிருந்து எண்ணிறந்த அண்டங்கள் உண்டாயின. அவை யாவும்

சிவனாருக்கு உடலாக அமைந்துள்ளன. ஆதலால் அவை களைத் திரு அண்டம் என அழைப்பது முறை. அண்டம் என்னும் சொல் உருண்டை அல்லது முட்டை வடிவில் இருப்பது எனப் பொருள் படுகிறது.

"கன்னல் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்பது ஆக்கினன் என்னில
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பரா அமுது ஆக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே."

அடிகள் 178—182

யானை கரும்பையும் விளாங்கனியையும் தேடுவது போல தகுதியற்ற என்னையும் இறைவன் பேரானந்தத்தில் திளைத்திருக்கச் செய்தனன். (பரா அமுது-தேவர்களுக்குரிய அமிர்தம்) என்னிடத்தில் சிவஞானம் என்னும் தேனில் நிலைத்திருந்து நான் அமிர்த சொரூபம் ஆகும்படி இறைவன் செய்தருளினான். பிரம்மாவுக்கும் திருமாலுக்கும் எட்டாத பேரியல்புடைய பெம்மான் எனக்கு எட்டியவன் ஆனான். என்னே!

தேவர்களுக்கு ஆயுள் அதிகம். ஆதலால் அவர்கள் அமிர்தம் அல்லது சாவா மருந்து அருந்தினவர்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால் பரம்பொருளை அடைகிற மனிதன் அமிர்தத்துவம் அடைந்தவனாகிறான். அது பிறப்பு இறப்புக்கு அப்பாற்பட்ட பெருநிலையாம். அது ஞானிகளின் தனியுடைமை.

தேன் என்னும் சொல்லைப் பல இடங்களில் மாணிக்க வாசகர் பகர்வதற்குக் காரணம் அவர் பரஞானத்தில் திளைத்திருந்ததேயாம்.

### 4. போற்றித் திரு அகவல்

(இது தில்லையில் அருளிச் செய்தது)

போற்றி என்பது வணக்கம் என்னும் பொருள்படும்; போற்றி என்னும் தமிழ் மந்திரத்தால் இறைவன் முன்

னிலைப் படுத்துவதால் இப் பகுதி போற்றித் திரு அகவல் எனப்பட்டது. இதற்குச் சகத்தின் உற்பத்தி என்று கருத்து உரைக்கப் பெற்றது. உயிர்கள் இவ்வுலகில் பிறந்து வீடு பேறு அடைதற்குரிய நெறி முறைகளை அறிவுறுத்தும் நிலையில் இந்தப் பாடல் அமைந்திருத்தலால் 'முத்திபெறு நெறியறியும் மொழி போற்றித் திருவகவல்' என இதனைச் சிறப்பித்தனர்.

இது 225 அடிகளால் ஆன நிலைமண்டில ஆசியப்பா. இறைவன் மண்ணில் வந்த எளிய கருணையும் உயிர்களின் பிறப்பும், பிறப்பிடைத்துன்பமும், அதனில் பிழைக்கதெய்வச் சிந்தனையும், இறைவனே குருவாக எழுந்தருளிய செய்தியும் முதற் பகுதியாக உள்ளது. எஞ்சிய பகுதிகள் சிவ மந்திரங்களாகக் கொண்டு அருச்சனை செய்யத்தக்கத் தன்மையன. இப்பகுதி யஜுர் வேதத்தின் இடைப்பட்ட ஸ்ரீருத்ரத்தினை ஒத்தது என்பர்.

காளைப் பருவத்தில் காம நோய்க்கு வசப்படுந் தன்மையை ஆசிரியர் கூறும் திறம் காண்மின்:

"காலை மலமொடு கடும்பகல் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழல் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கி உள்மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்திடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்குஇடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனம் கொள்ளையில் பிழைத்தும்"

அடிகள் 28—35

காலைப் பொழுதில் மலத்தானும், உச்சிப் பகற்பொழுதில் பசியானும் இராப் பொழுதில் துயிலானும், இவை யொழிந்த காலங்களில் ஊர்ப் பயணம் போதலானும், நேரும் துன்பங்களுக்குத் தப்பியும், கரிய கூந்தலினையும், சிவந்த

வாயினையும், வெள்ளிய மூரலினையும், கார்காலத்து ஆண் மயில் போல் ஒரு வழிப்பட்ட மென்மையினையும், மிகப் பொருத்தலின் ஒன்றோடொன்று நெருங்கி, உள்ளே களிப்புக் கொண்டு பட்டிகை அறும்படி மிகைத்து ஒளிவீசி, எதிரே பருத்து, இடுப்பானது இளைப்புற்று வருந்தா நிற்க எழுச்சிபெற்று, பக்கங்களிற் படர்ந்து, ஈர்க்கும் நடுவே நுழை யாத இளமை பொருந்திய கொங்கைகளையும் உடைய மகளிருடைய மிகுதியான கண்களின் சூறைக்குத் தப்பியும்— இவ்வாறு பலவற்றினின்று விடுபட வேண்டும் என்கிறார் ஆசிரியர்.

## 5. திருச்சதகம்

(இது திருப்பெருந்துறையில் பாடப்பட்டது)

திருவாசகத்தின் ஐந்தாம் பகுதி இது. தெய்வத்தன்மை பொருந்திய நூறு பாடல்களால் ஆனது. இதுமெய்யுணர்தல், அறிவுறுத்தல், சுட்டறுத்தல், ஆத்துமசுத்தி, கைம்மாறு கொடுத்தல், அனுபோக சுத்தி, காருணியத் திரங்கல் ஆனந்தத்து அழுந்தல், ஆனந்தப் பரவசம், ஆனந்தாதீதம், என்னும் பத்து தலைப்புக்களில் பத்து பத்துப் பாடல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும் யாப்பில் வேறுபடு கின்றது. இந்த நூறு பாடல்களும் அந்தாதித் தொடை பெற்று விளங்குகின்றன. தம்மை ஆட்கொண்டருளத் திருப் பெருந்துறை இறைவன்பால் மணிவாசகர் கொண்டிருந்த பேரன்பின் திறம் திருச் சதகத்தால் வெளிப்படுகின்றது. இதைப் 'பக்தி வைராக்கிய விசித்திரம்' எனக் கருது கின்றனர். பத்து வகையாக இரட்சித்த முறைமை எனவும் கூறுகின்றனர்.

**கட்டளைக் கலித்துறை**

"மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து
உன்விரை யாற்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்

*பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி*
*சயசய போற்றியென்னும்*
*கைதான் நெகிழவி டேன்உடை*
*யாய்என்னைக் கண்டுகொள்ளே."*
*—மெய்யுணர்தல்—1*

எனது உடல் மயிர்க்கூச்செறிந்து, நடுநடுங்கி, உன்னுடைய வாசனை நிரம்பிய திருவடியை அடைவதற்கு என்னுடைய கைகளைத் தலைமீது வைத்து, கண்களில் நீர் ததும்பி, மனம் கொதித்து, பொய்யை நீக்கி, உன்னைப் 'போற்றி ஜயஜய போற்றி' என்று துதிக்கின்ற ஒழுக்கத்தை நான் தளரவிடமாட்டேன். ஆதலால் எல்லாவற்றையும் உடையவனே! நீ என்னுடைய நிலையைக் கண்டு, இரங்கி, உன் அடியவர்களில் ஒருவனாக என்னை ஏற்றுக்கொண்டருள்வாயாக.

ஆண்டவனிடத்து மெய்யன்பு உண்டாகும்போது, மனம் கொதிக்க வஞ்சனைகள் நீங்கும். நா அவனை வாழ்த்தித் துதிக்கும். உடல் துடித்துக் கண்ணீர் பொழியும்.

மெய், மொழி, மனம் ஆகிய முக்கரணங்கள் முதல்வனுக்கென்றே ஒப்படைக்கப்படுகின்றன. இப்படிச் செய்வதை விட சிறந்த செயல் ஏதும் சாதகனுக்கில்லை. தெய்வ நாட்டம் தீவிரமாகப் பக்தனிடத்து வரும்போது அவைகள் எப்படிச் செயல்புரிகின்றன என்பது ஈண்டு விளக்கப்படுகிறது. உள்ளத்தினின்று பொய்யெல்லாம் நீங்கப் பெறுமளவு சித்த சுத்தி உண்டாகிறது. பர தரிசனத்துக்குத் தூயநெஞ்சம் தகுதியுடையதாகிறது.

இறைவன் உடையவன்; உயிரும் உலகும் அவனுடைய உடைமைகளாகின்றன. அலைகள் அனைத்தும் கடலின் உடைமைகளாய் இருப்பது போன்று, ஜீவனும் ஜகத்தும் பரமாத்மாவின் உடைமைகளாம். இது துவைத நிலையின் அனுபூதியாகும். முப்பொருள் உண்மை இங்குத் தெளிவடை

கிறது. ஈசன் சர்வக்ஞனாயிருப்பதாய் ஜீவர்களின் பக்குவம் எத்தகையது என்பது அவனுக்கு விளங்குகிறது. 'கண்டு கொள்ளே' என்னும் சொல்லில் இக்கோட்பாடு அடங்கி யிருக்கிறது.

ஐம்பூதங்களில் நிலம் மிக ஸ்தூலமானது. அதன் தன் மாத்திரை மணம். இறைவனுடைய ஸ்தூல தோற்றத்தில் அவனுக்குப் பாதமாயிருப்பது பிருதிவி அல்லது மண்.

"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
கோனாகி யான்எனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே"

அறிவுறுத்தல்—5

விண், மண், காற்று, நெருப்பு, நீர் ஆகிய ஐந்து பூதங்கள் ஆனது நீயே; உடலும் உயிரும் ஆனது நீயே; தோற்றத்தில் இருப்பவைகளும் தோன்றா நிலையில் இருப் பவைகளும் நீயே. உயிர்களுக்கு 'யான் எனது' என்னும் ஜீவ வியக்தியைக் கொடுத்திருப்பவனும் நீயே; இவை யாவுக்கும் ஈசனாய் இருப்பவனும் நீயே. இவைகளின் செயல்களெல்லாம் உண்மையில் உன் செயல்களாம். அளவு கடந்த உன் மகிமைகளை என்னால் எப்படி விளக்க முடியும்?

ஐம்பூதங்களுள் நீர் இப்பாடலில் சேர்க்கப்படவில்லை. எனினும் நாம் அதைச் சேர்த்துக்கொள்வது முறை. யாவும் ஈசன் சொரூபம், யாவும் அவன் செயல் என்று அறிந்து கொள்வது அறிவாகும். சிவபெருமான் எல்லாப் பொருள் களின் வடிவமாயும் அவைகளோடு ஒன்றாகக் கலந்தும், அவைகளைக் கடந்தும், அவைகளை ஆட்டி வைப்பவ னாயும் இருக்கின்ற தன்மையைச் சொல்லுக்கு அடங்காது என்கிறார்.

## 6. நீத்தல் விண்ணப்பம்

(இது உத்தரகோசமங்கையில் அருளிச் செய்யப்பட்டது)

தம்மை யாட்கொண்டருளிய திருப்பெருந்துறை இறைவன் கட்டளையின்படி திரு உத்தரகோசமங்கை திருக்கோயிலுள் புகுந்து ஆசிரியத் திருமேனி கொண்டு வந்த இறைவன் கரந்தருள 'உத்தரகோசமங்கைக்கு அரசே! அடியேனைக் கைவிட்டு விடுவாயோ?' என நெஞ்சம் நெக்குருகி நின்று பாடிய பாடல்களே நீத்தல் விண்ணப்பமாகும். கட்டளைக் கலித்துறை யாப்பில் 50 பாடல்களையுடையதாய், அந்தாதித் தொடை பெற்று இப்பகுதி அமைந்துள்ளது. இது உத்தரகோசமங்கையில் அருளப் பெற்றதற்கு அகச் சான்றாக முதல் இருபது பாடல்களிலும் இத்தொடர் வருகிறது. இதற்குப் பிரபஞ்ச வைராக்கியம் என முன்னோர் கருத்து உரைத்தனர்.

அனித்தியமாகிய பிரபஞ்சத்தில் பற்று வைத்திருக்கும் ஜீவாத்மாவுக்குச் சிவஞானம் கிட்டாது. உலகப் பற்றை நீத்தல் அல்லது துறத்தல் வேண்டும். சிவபெருமான் தாமே தியாகராஜனாகவும் மயான வாசியாகவும் இருந்து துறவின் அவசியத்தை விளக்குகிறார். பிரகிருதி என்னும் மாயையை நீத்துப் பரமனைப் பற்றிப் பிடிப்பது நல்ல ஆத்ம சாதனமாகிறது. ராகம் என்பது உலகின் கண் பற்று வைத்தல்; வைராக்கியம் என்பது உலகப் பற்றை ஒழித்தல்.

"கடையவ னேனைக் கருணையி
னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண்
டாய்விறல் வேங்கையின் தோல்
உடையவ னேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேன்எம்பி
ரான்என்னைத் தாங்கிக்கொள்ளே"

—நீத்தல் விண்ணப்பம்—1

யாவர்க்கும் கடைப்பட்டவனாகிய எளியேனை நின்னுடைய பேரருளினால் வெளிப்பட்டுக் கலந்து ஆட்கொண்டனை; அங்ஙனம் கொண்ட ஆனேறு ஊரும் ஐயனே எளியேனைக் கைவிட்டு விடாதே; வலிமை மிக்க புலியின் தோலை உரித்துப் போர்த்தருளினவனே. நிலைபெற்ற திருவுத்தர கோச மங்கைக்கு வேந்தே, பின்னப்பட்ட திருச் சடையினையுடையவனே! அடியேன் தளர்ந்துள்ளேன்; எளியேனைத் தாங்கிக் கொள்வாயாக.

## 7. திருவெம்பாவை

(திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பட்டது)

திருவண்ணாமலையில் மார்கழித் திங்களில் நீராட்டினை மேற்கொள்ளும் மகளிர் கூற்றாகத் திருவெம்பாவை அமைகிறது. இது இருபது பாடல்களையுடையது. 'எம்பாவாய்' என்ற முடிவுடன் மகளிர் ஒருவரை ஒருவர் துயிலெழுப்பும் பாங்கில் இந்நூல் அமைகிறது. 'பாவை பாட்டு' என்று இதனைக் கூறுவர். இதற்குச் 'சக்தியை வியந்தது' என்று கருத்துக் கூறுவர். நாடு மழையினைப் பெற்றுச் சிறக்கவும் தாம் சிவபக்தி மிக்க கணவர்களைப் பெற்று மகிழவும் வேண்டிப் பெண்கள் நோற்கும் நோன்பினைத் திருவெம்பாவை விளக்குகின்றது.

திருவண்ணாமலையில் மார்கழி மாதத்தில் பெண்கள் நீராடத் துயிலெழுப்பிச் செல்வதைக் கண்டு அடிகள் திருவெம்பாவையைப் பாடினார் என்ப. மும்மல இருளில் உறங்காமல் விழித்துப் பக்குவம் பெற்றவர் இறைவனது அருள் வெள்ளத்து முழுக வருக என்று அழைக்கும் உட்கருத்தையுடையது இப் பிரபந்தம் என்பர் அறிஞர்.

தை மாதம் முதல் ஆனி மாதம் வரையில் ஆறு மாத காலம் சூரியனுடைய உத்தராயனம். அது தேவர்களுக்குப் பகல். ஆடி முதல் மார்கழி வரையில் சூரியனுடைய

தட்சணாயனம். அது தேவர்களுக்கு இரவு. நமக்கு அதி காலை நான்கு மணியிலிருந்து ஆறு மணி வரையில் பிரம்ம முகூர்த்தம் (சுபவேளை). கடவுள் வழிபாட்டுக்கு அது சிறந்த நேரம். அதே போன்று தேவர்களுடைய நாளில் பிரம்ம முகூர்த்தம். ஆதலால் மார்கழி மிகச் சிறந்தது. மக்களும் அம்மாதத்தில் வழிபாடு மிகச் செய்கின்றனர். மார்கழி மாதத்தில் மக்கள் அதிகாலையில் எழுந்திருப் பதற்குத் திருவெம்பாவை திருவண்ணாமலையில் பாடப் பெற்றது. பரபோதம் பெற்று எழுந்திருக்க இது எக்காலத் திலும் எங்கும் யாவர்க்கும் பயன்படும். திரு+எம்+பாவை எனப் பிரித்து தெய்வத் தன்மை வாய்ந்த திருவருள் (பார்வதி அம்மையார்) எனப் பொருள் கொள்ள வேண்டும்.

பார்வதி அம்மையார் எங்களை இயைந்து இயக்குவ தோடு எங்கட்குத் துணை நாடித் தரற்கு யாங்கள் செய்யும் நோன்பினைப் பாவைத் திருவுருவில் நின்று ஏற்றுப் பயனளிக்கிறாள் என்பது 'திருவெம்பாவை'யின் திரண்ட பொருளாகும். அத்தகைய நலம் வாய்ந்த இத்திருத் தொடரை இடைவிடாது நினைவு கூர்தற் பொருட்டு ஒவ்வொரு பாட்டு இறுதியிலும் அடிகள் அமைத்தருளினார். ஏலோ எம்பாவாய் என்பதில் ஏலும், ஓரும் அசைகள். பாவை—விளி. பாவை நோன்பு நோற்கும் பெண்கள் பாவை எனப் பெற்றனர்.

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கள்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய
வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டிங்கன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள் என்னேஎன்னே
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்"

— திருவெம்பாவை-1.

முதலும் முடிவும் இல்லாத அரிய பெரிய ஒளி உருவனான சிவபெருமானை நாங்கள் புகழ்ந்து பாடுவதைக் கேட்டும், வாள் போன்றதும் அகன்றதுமான கண்களை யுடைய பெண்ணே! நீ உறங்குகின்றாயோ? உன் காதுகள் செவிடானவையோ? மகாதேவனுடைய நீண்ட வீரக் கழல் களை யணிந்த திருவடிகளை அடியார்கள் தெருவில் துதித்த துதிகளின் ஓசை ஒருத்தி வீட்டிற்குள் போய்க் காதில் விழுந்தது. ஏங்கி அழுது, தன்னை மறந்து, பூம் பள்ளிமீது புரண்டு இப்படி யாதொரு பொருளும் ஆகாமல் மூர்ச்சித்துக் கிடக்கின்றாள். நீயோ, நாங்கள் வந்து உன் வீட்டு வாசலில் நின்று இறைவனுடைய புகழ்களைப் பாடுகிறபோது, அதைக் கேட்டும் எழுந்திராமல் இப்படிப் படுத்துக் கிடக்கும் இதுதான் எங்களுடைய தோழியாகிய உனது இயற்கையோ? இது என்ன வியப்பு! பாவை போன்றவளே! இதைக் கேட்டு ஆராய்வாயாக.

## 8. திருவம்மானை

(திருவண்ணாமலையில் அருளிச் செய்யப்பட்டது)

இது முதல் ஒன்பது பதிகங்கள் மகளிர் விளையாட்டுப் பகுதிகளாக உள்ளன. அவற்றுள் 1. மூவர் காய்ஆடும்போது பாடும் பாடலாக அமைந்த திருவம்மானை. 2. திருக் கோயிலில் இறைவனது மெய்ப்பூச்சுக்குரிய பொன்னிறப் பொடி இடிக்கும் பெண்கள் பாடும் வரிப்பாட்டு அமைப்பில் அமைந்த திருப்பொற் சுண்ணம். 3. கை கோர்த்து ஆடும் திருக்கோத்தும்பி 4. முறத்தில் தெள்ளிக் கொழித்து விளை யாடும் திருத்தெள்ளேணம். 5. வினாவிடைப் பாங்கில் வரும் திருச் சாழல். 6. பூக்கொய்யுங்கால் பாடும் திருப்பூவல்லி. 7. உயர எழுந்து குதித்தாடும் திருவுந்தியார். 8. மகிழ்ச்சி யால் பூரித்த தோள் நோக்கிக் கைவீசி விளையாடும் திருத் தோள் நோக்கம். 9. ஊஞ்சற் பாட்டாகிய திருப் பொன்னூசல் முதலிய மகளிர் விளையாட்டு வகைப் பாடல்கள் பதிகங்களாக நிரலே அமைந்து சிவபெருமானின்

கருணையினையும் அவளே முழுமுதற் கடவுள் என்பதனை யும் இனிது விளக்குகின்றன.

அம்மானை என்பது பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டுப் பெண்டிர் விளையாடும் ஒருவகை விளையாட்டு. அவர்கள் அம்மானைக் காய்களை வைத்துக் கொண்டு விளையாடுவர். அம்மானை ஆடுபவர் தங்கட்கு நல்ல கணவன் வாய்க்க வேண்டுமென்று அக்கணவனின் சிறப்புக் களை கிளந்தெடுத்து வரிப்பாட்டாகப் பாடி ஆடுவர். அம் முறையில் மாணிக்கவாசகர் சிவபெருமான்மீது வைத்தி ருந்த எல்லையற்ற காதலால் கசிந்துருகி அவனது திருவடி யில் கலக்கின்ற திருமணத்தை எய்துதற் பொருட்டு 'அம்மானை' பாடியருளினார். அது, 'திரு' என்னும் அடை மொழியைப் பெற்றுத் திருவம்மானை என்று வழங்கப்படு கிறது.

பொதுவாகப் பெண்களை அம்மா என்று அழைப்பது தமிழ் மரபு; அம்மனை என்பது இலக்கிய மரபு. அம்மானை என்னும் சொல் வரிப்பாட்டினையும் பெண்டிரின் ஆடலை யும் குறித்து நிற்கிறது. அச்சொல் விளி வேற்றுமை என்பதற்கு 'ஐ' ஈறுகெட்டு 'ஆய்' என்னும் ஈற்றினைப் பெற்று 'அவமானாய்' என்று ஒவ்வொரு பாட்டின் ஈற்றிலும் அமைந்திருக்கிறது.

"விண்ணாளுந் தேவர்க்கும் மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கும் மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்"

—திருவம்மானை 10

தேவர்களுக்கெல்லாம் மேலோங்கியிருக்கும் பேரறிவுப் பொருள் சீலன். உலகை எம்முறையில் ஆளவேண்டும்

என்பதை மன்னவர்கள்மகாதேவனிடத்தே கற்றுக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர். தகை சான்ற தமிழ்நாட்டில் தீந்தமிழ் வளர்ச்சிக்கு மூல அறிவாய் இருப்பவன் சிவன். ஆண் பெண் பேரிணக்கத்துக்கு எடுத்துக் காட்டாய் இருப்பவன் அர்த்த நாரீசுவரன். நான் விரும்பும் திருப் பெருந்துறையில் அவன் கண் கூடாக எழுந்தருளி என்னை ஆட்கொண்டான். அந்த அண்ணாமலையானைப் பாடுவோம்.

தாய்ப்பால் அந்தந்தச் சேய்க்கு முற்றிலும் ஒத்திருப்பது போன்று, பரமனை அறிந்து கொள்ளுதற்கு அவரவர் தாய் மொழி துவக்கத்தில் நன்கு உதவுகிறது. திருவண்ணாமலை யில் பெண்கள் அம்மனை ஆடுவதைக் கண்டு அடிகள் இப் பதிகம் பாடினார் என்ப.

## 9. திருப்பொற் சுண்ணம்

(தில்லையில் அருளிச் செய்தது)

பலவகை மணப் பொருள்களை உரலில் இட்டு இடிக்கப் படுவது பொற் சுண்ணம். இது பொன் போன்ற நிற முடையது. பொன்னும் சிறிது இதில் சேர்க்கப்படுகிறது. திருமஞ்சனத்துக்காக இது உபயோகிக்கப்படுகிறது.

இது வள்ளைப் பாட்டு, உரற்பாட்டு, உலக்கைப்பாட்டு, அவலிடி அம்மனைவள்ளை முதலிய பெயர்களால் வழங்கப் பெறும். காதலன் திருமுழுக்குக்கு வேண்டும் மணப் பொடி யினைக் காதலியும் தோழி முதலியோரும் காதலன் பேர்பாடி இடித்தல். அந்த முறையில் சிவபெருமான் திருமுழுக்குக்கு வேண்டும் திருமணப்பொடி அமைத்தல்.

“சங்கம் அரற்றச் சிலம்பொலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்
செங்கனி வாயித ழும்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகப்பாடிக்

கங்கை இரைப்ப அராஇரைக்குங்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
பொற்றிருச் சுண்ணம் இடித்து நாமே"

—திருப்பொற் சுண்ணம் 14

செவ்விய அணிகலம் அணிந்த மங்கை நல்லீர்! வலம்புரிச் சங்காலாகிய வளையல்கள் ஒத்துறுப்பன போல் ஒலிக்கவும் காலணியாகிய சிலம்பு இனிய ஓசை தரவும், தாழ்ந்து நீண்ட அழகிய கூந்தலில் வளையமாகச் சூழச் சூடியுள்ள மணநாறு பூமாலையடவும், கொவ்வைக் கனியை ஒத்த செவ்விய வாயிதழ் அசையவும் சிவ உலக வைப்பின் திருவருட் சிறப் பினைப் பாடிக் கங்கை ஒலிக்கவும் அவ்வொலியினால் பாம்பு இரைச்சலிடவும் இடமாகவுள்ள விரிந்து செறிந்த பின்னல் திருச்சடையிடை முடியாகவுடைய சிவபெருமான் திருவடிக்கே இடையறாது கொண்டுள்ள பொங்கி மிகுங் காதலால் முலைகளினின்றும் தீம்பால் பொங்கி வழியவும் அழகிய பொற்சுண்ணத்தை நாம் பாடி இடிப்போமாக.

காதல் மிகுதியால் இயற்கைக்காரணம் இல்வழியும் பால் பொங்கும் என்ப. திருப்பொற் சுண்ணம் இடிக்கும் நல்லார் சிவபெருமான் மாட்டு வைத்த பேரன்பின் மிகுதியாம் காத லால் கொங்கைகள் பொங்கிற்றென்க.

## 10. திருக் கோத்தும்பி

(தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

வண்டு வகைகளுள் மிகப் பெரியதாய் இருப்பது கோத் தும்பி அல்லது அரச வண்டு என அழைக்கப்படுகின்றது. ஜீவாத்மாக்களில் மானிட வடிவெடுத்து வந்துள்ளவன் கோத்தும்பி என்று உருவகப்படுத்தி இயம்பப்படுகிறான். பூவிலுள்ள நறுமணத்தையும் தேனையுமே தும்பி விரும்பு வது போன்று மனிதனாய்ப் பிறந்திருப்பவன் பரமனையே நாடியிருக்கக் கடமைப் பட்டிருக்கிறான்.

"கரணங்கள் எல்லாம் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்களே சென்று சார்தலுமே தான்எனக்கு
மரணம்பிறப் பென்றிவை இரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"
— திக்கோத்தும்பி-9.

அகக்கரணம் புறக்கரணம் என்ற எல்லாக் கரணங்களையும் தாண்டி நின்றருளும் நீல நிறமான கழுத்தை உடையவனுடைய திருவடிகளையே போய் அடைந்தவுடன், தானே எனக்கிருந்த இறப்பு பிறப்பு எனப்படும் இந்த இரண்டின் மயக்கத்தைப் போக்கியருளிய கருணைக் கடலுக்கே சென்று ஊதுவாயாக சிறந்த வண்டே.

மலர்கட்கிடையே தேனைத் தேடித் திரிந்து சென்ற வண்டைக் கண்டு, தில்லையில் அடிகள் இப்பதிகம் பாடினார் என்ப. போதத்தை வண்டாகக் கருதிச் சித்த விகாரத்தை அறிவிக்கத் தூதாகச் செல்லவிடும் உட்கருத்தை உடையது என்பர் அறிஞர்.

**11. திருத் தெள்ளேணம்**

(தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

"கயல்மாண்ட கண்ணிதன் பங்கன்
எனைக்கலந்து ஆண்டலுமே
அயல்மாண் டருவினைச் சுற்றமும்
மாண்டு அவனியின் மேல்
மயல்மாண்டு மற்றுள்ள வாசகம்
மாண்டு என்னுடைய
செயல் மாண்ட வாபாடித்
தெள்ளேணங் கொட்டாமோ"
—திருத்தெள்ளேணம்-11.

கயல்மீன் போன்ற மாட்சிமையுடைய திருக்கண்களையுடைய உமா தேவியாரைத் தனது உடலில் ஒரு பாகத்தில் கொண்டருளியதும் சிவபெருமான் அடியேனை வலியவந்து

கூடி ஆட்கொண்டருளியதும், அயலாரும் அரிய வினைத் தொடர்பால் வந்த சிற்றத்தாரும் உலகத்தில் உள்ள ஆசையும், வேறுள்ள சொற்களும், எனது செய்கைகளும் அழிந்து போன விதத்தைப் பாடி, தெள்ளேணம் கொட்டுவோமாக.

தெள்ளேணம், கைகொட்டிப் பாடி ஆடும் மகளிர் விளையாட்டு வகை. ஆண்டவன், கருணையினால் அன்பர்களைக் கலந்து ஆட்கொண்டு விட்டால், தம்மை இறைவனுக்கு அன்னியமாக நினைக்கும் நினைவுநீங்கும்; உலகப் பற்றுக்கள் எல்லாம் ஒழியும்; ஆனந்தப் பரவசத்தினால் உலகசம்பந்தமான பேச்சுக்களும் செயல்களும் இயலாதவைகளாகும். சுருங்கச் சொல்லில் தற்போதம் அதாவதுதான் என்ற உணர்ச்சி ஒழிந்து சிவபோதம் அதாவது எல்லாம் சிவன் செயல் என்ற உணர்ச்சி தலையெடுக்கும். சிவஞானம் மிகுந்து, அதனால் பேரின்பத்தில் ஆழ்ந்து மெய்ம்மறந்து அடியார் ஆடிப்பாடலை உட்கருத்தாக உடையது என்பர் அறிஞர்.

## 12. திருச்சாழல்

(தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

சாழல் என்பது ஒரு வகை மகளிர் விளையாட்டு; தடையும் தடைக்கு ஏற்ற விடையும் பாடுவது இதில் இடம் பெறுகிறது. பௌத்தர்கள் சைவத்திற்கு தடை செய்தார்கள் என்பதும் ஊமையாய் இருந்த பௌத்த அரசகுமாரி அத்தடைகளுக்கு விடை சொன்னாள் என்பதும் வரலாறு.

கடவுள் உண்டு என்றோ இல்லையென்றோ வாதிப்பது புத்தமதக் கொள்கையன்று. அக்ஞேய வாதம் புத்தமதம் ஆகிறது. அதாவது கடவுளைப் பற்றி மனிதனுக்கு ஒன்றும் தெரியாது. அதனால் அவனுக்குக் குறையொன்றுமில்லை. தன்னைத் தானே திருத்தியமைத்துக் கொள்ள மனிதனுக்கு இயலும். அதற்குச் சீலம் முற்றிலும் அவசியமானது. அறிவுக்கு எட்டாத ஒரு பொருள் இருக்கிறது என்றோ

இல்லை என்றோ வாதாடி வீண் பொழுது போக்காதே. இது புத்தமதக் கொள்கை.

"பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதும் திருவாயால் மறைபோலும் காணேடி
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவும் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ"

— திருச்சாழல் 1.

இறைவன் தனது திருமேனியில் பூசிக்கொள்வது திருவெண்ணீறாகும். ஆபரணமாக அணிவது சீறுகின்ற பாம்பாகும். திருவாயால் பேசுவதும் வேதங்களாம். இது என்ன புதுமை. எம் இறைவன் பூசுவதையும் பேசுவதையும் பூண்பதையும் பற்றிப் பேசி என்ன பயன்? அவன் இறைவன்; எல்லா உயிர்களுக்கு ஏற்ற பயன் அளிப்பவனாவான், சாழலோ.

முன்னொரு காலத்து ஈழநாட்டுப் புத்த குருமாருள் சிலர் தில்லை வந்தனர். அவர்களுடன் ஈழ நாட்டு மன்னனும் தன் அருமை மகளுடன் வந்தனன். அப்பெண் பிறவியிலேயே ஊமை. வந்தவர்கள் சைவர்களுடன் வழக்கிட்டுத் தம் கொள்கைகளை நிலைநாட்ட முயன்றனர்.

மாணிக்கவாசகர் அவர்களுடன் வழக்கிட்டு வென்றார். பௌத்தர்கள் தங்கள் தோல்வி கண்டு மனம் புழுங்கி முறையில்லா முறையாக உரையாடத் தொடங்கினர். மாணிக்கவாசகர் அவர்களை ஊமைகளாக்கினார். அவர்கள் வழிக்கு வந்து உண்மை கண்டு சைவராயினர்.

அப்போது ஈழ நாட்டு மன்னன் தன் அருமை மகளைப் பேச வைக்குமாறு பணிந்து நின்றான். அவ்வாறே மாணிக்கவாசகர் அப்பெண்ணைப் பேச வைத்தார். அது சம்பந்தமாக அருளிச் செய்ததுதான் இப்பதிகம் என்று கூறுவார்.

திருநீறு, அரவம், வேதம் இவைகளைப் பற்றிய குறிப்பு வருமாறு: உலகப் பொருள் ஒன்றில் அழியும் பகுதி தகனமாகிறது. அழியாப் பகுதி சாம்பலாய் எஞ்சி நிற்கிறது. பிறகு அதை எவ்வளவு சுட்டாலும் பழைய சாம்பலாகவே இருக்கும். எனவே சாம்பல் பரம் பொருளின் சின்னம். அழியும் தன்மையுடைய பிரபஞ்சத்துக்கு ஆதாரமாக அழியாப் பொருள் ஒன்று உண்டு என்றும் உண்மையை விளக்குகிற சின்னம் திருநீறு.

ஈசனுடைய சிருஷ்டியில் இனியவை இடம்பெற்றிருப்பது போன்று இன்னாதவைகளும் இடம் பெற்றிருக்கின்றன. உயிர்களின் முன்னேற்றத்திற்கு இன்னாதவை எதிர் மறையில் தூண்டுதல் போடுகின்றன. எனவே அவைகள் முற்றிலும் தேவை. சிவன் சர்ப்பததை அணிந்திருப்பதன் உட்கருத்து இதுவே யாம்.

சரம், அசரம், சேதனம், ஜடம் ஆகிய அனைத்திலும் அறிவு மிளிர்கிறது. ஏனென்றால் அனைத்தும் அறிவினின்று வடிவெடுத்தவைகள். எது வித்யா சொரூபமோ அது வேதம். பிரபஞ்சம் முழுவதும் வேத சொரூபம். சிவனார் வேதம் ஓதிக் கொண்டிருக்கிறார் என்பதன் பொருள் இதுவே. அவரவருக்கு உகந்த வேதத்தை இறைவன் ஓது கிறார் என்று சமயவாதிகள் இயம்புவது தத்துவத்துக்கு ஒத்துள்ள கற்பனை.

### 13. திருப் பூவல்லி

அடிகளார் திருத் தில்லையில் எழுந்தருளியிருக்குங் காலத்து வில்லேர் புருவ நல்லாராம் மகளிா அஞ்செழுததும் நெஞ்சு எண்ணப் பூப்பொழிலில பூக்கொய்வதனைக் கணடருளினார். அந்நல்லார் கூற்றாக திருப்பூவல்லி என்ற இதனை அருளிச் செய்தார்.

“இணையார் திருவடி என்தலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையும்
துறந்தொழிந்தேன்

அணையார் புனல்தில்லை அம்பலத்தே ஆடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ.''

— திருப் பூவல்லி-1.

தமக்குத் தாமே ஒப்பாகிய சிவபெருமானின் திருவடி இரண்டினையும் அவன் வலிய வந்து எளியேன் முடிமேல் சூட்டியருளினன். அங்ஙனம் வைத்தலுமே நிலையான துணையாகிய சுற்றங்கள் என்று யான் எண்ணியிருந்த அத்தனை சுற்றங்களையும் அவனருளால் நீங்கினேன். அதனால் அணை பொருந்திய நீர் நிறைந்த தில்லைச் சிற்றம்பலத்தின் கண்ணே உலகுய்ய, உலகம்மை காணத்தக்க திருக்கூத்துச் செய்கின்றவன் சிவன்; அவன் மெய்யன்பர்களைப் பிறவிப் பெருங்கடலினின்றுங் கடைத் தேற்றுவதற்கு வேறெங்கும் காணவும் கருதவும் ஒண்ணாத சிறந்த புணையாவான்; அவனுடைய சிறந்த புகழ்களைப் பாராட்டிப் பாடிக் கொண்டே நங்கைமீர் கொடிப் பூக்களைக் கொய்வோமாக. கொய்தல்—மலர்களை நலமுற மெல்லப் பிரித்தல்.

## 14. திருவுந்தியார்

உந்தி பறத்தல் என்பது மகளிர் விளையாட்டுக்களுள் ஒன்று.

1. வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா(று) உந்தீபற

2. ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை யுந்தீபற

3. தச்சு விடுத்தலும் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென்(று) உந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற

4. உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்(டு)
எய்யவல் லானுக்கே உந்தீபற
இளமுலை பங்கனென்(று) உந்தீபற

5. சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி உந்தீபற
உருத்திர நாதனுக்(கு) உந்தீபற

— திருவுந்தியார் 1-5.

1. தோழி! சிவபெருமான் திரியும் புரங்களாகிய முப்புரத்தையும் அவற்றுள் வாழும் அரக்கர் செய்யும் கொடுமையையும் நோக்கி அவற்றை அழிக்கத் திருவுளங் கொண்டனன். உடனே பொன் மலையாகிய இமயமலை வில்லாக வளைந்து அவர்தம் திருக்கையினிடத்து வந்து சேர்ந்தது. போரும் விளைந்தது. முப்புரமும் சிதறுண்டு அழிந்தன, எனப் பாடி, உந்திப் பறந்து விளையாடுவோமாக. முப்புரமாகிய மூன்று மதில்களும் ஒருங்கு வெந்து ஒருந்தன என்று பாடி ஆடுவோமாக.

2. காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவன் ஏகம்பர் எனப்படுவார். அவர் திருக்கரத்தில் இரண்டு அம்புகள் காணப்படவில்லை. உள்ளது ஓரம்பே யாம். அவ்வோர் அம்பும் அவர்க்குப் பயன்படவில்லை, முப்புரம் வெப்புறும்படி சிரித்தார் ஆதலின், எனவே அந்த அம்பு அவருக்குப் பாரமாயிற்று. இவ்வருளிப் பாட்டினைப் பாடி உந்திப் பறந்து விளையாடுவோமாக.

3. விண்ணவர் தச்சுத் தொழிலால் அமைத்த தேரினைக் கொண்டு வந்து சிவபெருமான் முன் நிறுத்தினர். தேரில் ஏறிக்கொள்ளுமாறு வேண்டினர். அவர்களின் வேண்டுகோளின்படி அத்தேர் மீது திருவடி வைத்தவுடன் அத்தேரின் அச்சு முறிந்தது. வேறுதேர் இன்றியே முப்புரம் எரிந்ததென்று உந்தீபற.

4. தனது திருவடிக்கே பதித்த நெஞ்சினராகிய மூவரையும் அறிந்து ஆட்கொள்ள வல்லான் சிவபெருமான். அவரது புகழ்பாடி உந்தீபற. உமாதேவியை இடப்பாகத்தில் கொண்டவரென்று உந்தீபற.

5. வீரபத்திரராலும் பத்திர காளியாளும் தக்கன் வேள்வி அழியுமாறு மோதப்பட்டது. தேவர்கள் தப்பி ஓடி னார்கள். அந்நிகழ்ச்சியைப் பாடி உந்தீபற. உருத்திரர் களுக்குத் தலைவனைப் பாடி உந்தீபற.

## 15. திருத்தோள் நோக்கம்

மகளிர் ஒருவர் தோளை ஒருவர் அன்போடு நோக்கித் தொட்டும் தட்டியும் அகமகிழ்ந்து ஆடும் விளையாடலாகும்.

"காமன் உடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமகள் நாசிசிரம் பிரமன் கரமெரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோணோக்கம் ஆடாமோ"

— திருத்தோள் நோக்கம்-11.

பிரபஞ்சத்தில் இருப்பவர்கள் எல்லாரும் பரமனோடு எவ்விதத்தில் தொடர்பு கொண்டாலும் அதன் விளைவாக அவர்கள் தூய்மை அடைகின்றனர் எனற கருத்து இப் பாடலில் விளக்கப்படுகிறது.

சிவபெருமான் தவ நிலையில் இருந்தபோது காமன் அங்குச் சென்றான். அத்தவற்றினால் சிவனது நெற்றிக் கண்ணால் காமன் உரு அழிந்தான். உருவிலியாயினான் உடல் நீங்கிற்று. மார்க்கண்டனிடம் வந்த கூற்றுவன் சிவ பெருமானால் உதை யுண்டு மாண்டான். இவை போன்று தக்கன் வேள்வியில் சிவனை மறந்து வேட்கையால் கூடு யிருந்த கதிரவன் பல் உடைபட்டது. சரஸ்வதியின் மூக்கு அறுப்பட்டது. பிரமனுடைய தலை கிளளப்பட்டது. அக் கினியின் கை அறுபட்டது. சந்திரனின் கலை தேய் வுண்டது. தக்கன் தலையும் யாகாதிபதியின் தலையும் அறுபட்டன. இவ்வாறு ஒன்பது பேரும் தண்டிக்கப் பெற்றனர். இவை அவர்களைப் பாவத்தினின்றும் தூய்மைப் படுததின. சிறப்பமைந்த இப்பாட்டினைப் பாடித் தோள் நோக்கம் ஆடுவோமாக.

## 16. திருப்பொன்னூசல்

அழகுள்ள பெண்கள் சோலையிடத்து ஆடும் பொன்னூசல் கண்டு அடிகளார் பொன்னம்பலவாணன் மீது பாடியருளிய பதிகம் இது. இப் பதிகத்தைப் பாடித் துதிப்பதாலும் ஊசலாடுவதாலும் இரு பேரின்பமும் ஒருங்கெய்துவர் என்பது நூற்கொள்கை.

“சீரார் பவளங்கால் முத்தம் கயிறாக
ஏராரும் பொற்பலகை ஏறி இனிதமர்ந்து
நாரா யணன்அறியா நாள்மலர்த்தாள் நாயடியேற்(கு)
ஊராகத் தந்தருளும் உத்தர கோச மங்கை
ஆரா அமுதின் அருள்தாள் இணைபாடிப்
போரார்வேல் கண்மடவீர் பொன்னூசல் ஆடாமோ”

—திருப்பொன்னூசல் 1.

சிறந்த பவழத்தால் கால்நாட்டி, நல்முத்துக்களால் கயிறு கோத்து, மாற்றுயர்ந்த பொன்னால் பலகை சேர்த்து, ஊசல் அமைத்துள்ளனர். வேல் போன்ற கண்களையுடைய இளமை பொருந்திய நங்கையீர்! அவ்வூஞ்சல் பலகை மீதமர்வோம்; நாராயணனாலும் அறிய வொண்ணாத திருவடித் தாமரை மலரை நாய் போன்ற அடியேனுக்கு உறைவிடமாகத் தந்தருளினன். அவன் உத்தரகோச மங்கையில் எழுந்தருளியுள்ளவன். அமுதம் போன்றவன். அவனுடைய அருள் நிறைந்த திருவடிகளைப் பாடிப் பொன்னூசல் ஆடுவோமாக.

ஊசலின் தன்மையை வாழ்க்கையின் ஒப்பாக முன்னோரும் கூறியுள்ளனர்.

## 17. அன்னைப் பத்து

இறைவன் சிறப்பினைச் சிவமணங் கமழும் அருட்பெருஞ் செல்வி தன் அன்னைக்கு எடுத்து இயம்புவது

போன்று அமைந்துள்ளது இப்பதிகம். அப்பதிகத்தின் திரண்ட பொருள் வருமாறு.

சிவன் வேத மொழியன்; வெண்ணீறு பூசியவன்; ஓசை வடிவினன்; என்று ஒரு சிறு குழந்தை தன் தாயிடம் சொல்லுகிறது. உள்ளம் அருள் நாட்டம்கொண்டு உருகுவது பேரானந்தத்தைப் பெறுவதற்கு உற்ற உபாயமாகும். பரத்தைச் சார்ந்துள்ள மனதுக்கு யாண்டும் இளமையும் அழகும் ஆனந்தமும் உண்டு. பாம்பும் புலித்தோலும் உடைய நீறு பூசிய ஆண்டியைக் கண்டு சிறார் அஞ்சுவர். ஆனால் சிவபக்தி உடையவர் அச்சத்தை வெல்லுவர். விஷயங்களில் அலைந்து திரியும் மனது சிவ சொரூப தியானத்தில் அடங்கி ஒருமுகப்படுகிறது.

நெஞ்சத்தில் நிலைத்துள்ள சிவனைப் புறத்தில் தேடித் தட்டழில் வேண்டாம். சிவனார் எந்த வேடத்தில் வந்தாலும் அவர் மாந்தர் உள்ளத்தைக் கவரவல்லவர். கால தத்துவம் காலத்துக்கு அப்பாற்பட்ட சிவன் கையில் அடங்கியுள்ளது. சிவன் பிச்சாடனராய் வருவது உலக வாழ்க்கை அநித்தியம் என்பதை உணர்த்தி, உயிர்களை உய்வித்தல் பொருட்டேயாம். இறைவன் முடியில் கொன்றைப் பூவும், பிறைச் சந்திரனும், வில்வமும், ஊமத்தம் பூவும் நெருங்கி அமைந்துள்ளன. அக்கோலத்தைப் பார்க்கும் பக்தர்களுக்கு பக்தி என்னும் பித்தம் முதிர்கிறது.

## 18. குயிற் பத்து

அடிகளாற் தில்லையில் எழுந்தருளியிருந்த பொழுது இளவேனிற் காலம் வந்தது. சோலைகள் பூத்து இன்பம் பெருகின. குயில்கள் கூவின. அடிகளார் அக்குயில்கள் வாயிலாக செம்பொருள் துணிவின் சிறப்பு இயல்புகளை மொழிந்தருளி எல்லாம் வல்ல இறைவனை வருமாறு கூவ ஓதுகின்றார்.

"கீதம் இனிய குயிலே
கேட்டியேல் எங்கள் பெருமான்
பாதம் இரண்டும் வினவில்
பாதாளம் ஏழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லின்
சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதி குணமொன்றும் இல்லான்
அந்தமிலான் வரக் கூவாய்"

—குயிற் பத்து 1.

பண் அமையப் பாடும் இனிய ஓசையமைந்த குயிலே! யான் அன்புடன் மொழிவதனைக் கேட்பாயாக. எங்கள் இறைவனின் திருவடி இரண்டையும் யாண்டுக் காணலாம் என வினவினால் கீழ்நிலை என்று சொல்லப்படும் ஏழு உலகங்களுக்கும் அப்பால் உள்ளன. அதுபோல் அவரது திருமுடியானது சொல் நிலையையும் கடந்த மேல் நிலையாகும். ஆரம்பமும் முடிவும் இல்லாதவன். அத்தன்மையனை எழுந்தருளி வருமாறு இனிமையாகக் கூவுவாயாக.

## 19. திருத் தசாங்கம்

தசாங்கம் என்பது பத்து அங்கங்கள் எனப் பொருள்படுகிறது. ஓர் அரசனை அறிமுகப்படுத்தும்போது அவனுக்குரிய பத்து இயல்புகளை இயம்புவது வழக்கம். அவை யாவன : பெயர், நாடு, ஊர், ஆறு, மலை, புரவி, படை, முரசு, தார், கொடி என்பனவாம். இந்த ஐதீகத்தை அண்ணல் தமது இறைவன்பால் கையாளுகிறார். இப்பதிகத்திலுள்ள பத்துப் பாடல்களின் கருத்து வருமாறு :

எம்பெருமான் பெயர் மகாதேவன்; அவனுடைய நாடு பாண்டி நாடே. ஊர் உத்தர கோச மங்கை. இறைவனது ஆறு ஆனந்தம்; இமயமலையும் அதன் சிறந்த பகுதியாகிய கயிலையங்கிரியும் இவனது இருப்பிடம்; மானிட அமைப்பில்

சுழுமுனை நாடி என்னும் மகாமேரு அவனுடைய மலை யாகிறது; அவன் காளை வாகனன்; ஜீவர்கள் அனைவரும் அவனுக்கு வாகனமாகின்றனர். திரிசூலமே அவனுடைய ஆயுதம். அது ஞானத்தின் சின்னம், ஞானத்துக்கு நிகரான ஆயுதம் இல்லை. அஞ்ஞானத்தில் உதிக்கின்ற மும்மலங் களை அது அகற்றுகிறது.

நாத பிரம்மம் அல்லது ஓங்கார தத்துவமே சிவனாரது முரசு. உடுக்கை அல்லது தமருகம் அதற்குப் புறச்சின்ன மாகிறது. ஸ்தூல அமைப்பில் தாளிக் கொடியும் அறுகும் சேர்ந்தது அவன் அணியும் மாலை. உண்மையில் பிரபஞ்சத் துக்குரிய தத்துவங்கள் எல்லாம் சேர்ந்து அமைந்தது அவ னுடைய மாலை சிவனுக்குரியது காளைக் கொடி; அந்தந்த தெய்வத்துக்குரிய வாகனம் கொடியில் அமைவது முறை; ஜீவனைப் பரமன் தனக்குச் சொந்தமாக்குகிறான் என்பது அதன் கருத்து. அப்படிச் செய்வது அழகிய செயல். உபா சனை பண்ணாதவர்க்கு அக்கோட்பாடு ஏமாற்றத்தை உண்டுபண்ணுகிறது.

## 20. திருப்பள்ளி யெழுச்சி

(திரோதான சுத்தி)

இறைவனுடைய ஐந்தொழில்களுள் மறைத்தல் ஒன்று. சோரூப ஞானத்தைத் தமோகுணம் மறைத்திருக்கிறது. அதிகாலையில் எழுந்து திருப்பள்ளி யெழுச்சி வாயிலாக இறைவணக்கம் செய்து வருகிறவர்களுக்கு தமோகுணம் தெளிவடைகிறது. அச்செயல் திரோதானசுத்தி எனப்படும். திரோதனம்—மறைத்தல்.

"போற்றிஎன் வாழ்முதல் ஆகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற்கு இணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் திருமுகத்(து) எமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் திருவடி தொழுகோம்

சேற்றிதழ்க் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாய்எனை உடையாய்
எம்பெரு மாள்பள்ளி எழுந்தரு ளாயே.

—திருப்பள்ளி யெழுச்சி —1

எனது வாழ்வுக்குக் காரணமான பொருளே! உனக்கு வணக்கம். பொழுது விடிந்தது; உனது தாமரை மலர் போன்ற திருவடிகளுக்கு ஏற்றவையான பூக்களைக் கொண்டு அருச்சித்து, உனது திருமுகத்தில் உண்டாகும் புன்முறுவலை ஏற்றுக்கொண்டு உன் திருவடிகளைத் தொழுவோம். சேற்றில் வளரும் தாமரைப் பூக்கள் மலர்கின்ற குளிர்ந்த வயல்களால் சூழப்பெற்ற திருப்பெருந் துறையில் உறைகின்ற சிவபெருமானே! உயர்ந்த ரிஷபக் கொடியை உடையவனே! என்னை ஆண்டு கொண்டவனே! எம்பெருமானே! பள்ளியெழுந்தருள்வீராக.

குறிப்பு:— இதுவரை தொடர்ந்து இருபது பதிகங்களுக்குப் பாடல்களும் விளக்கமும் கூறப்பட்டன. இனி இடம் அஞ்சி சில குறிப்பிட்ட பதிகங்கள் மட்டும் விளக்கப் படும்.

## 22. கோயில் திருப்பதிகம்

(தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனோர்கைம் மாறே"

— கோயில் திருப்பதிகம்-10.

சங்கரனே! எனக்கு உன்னைத் தந்திருக்கின்றாய்; மிகச் சிறியேனான என்னை ஏற்றுக் கொண்டிருக்கிறாய்;

யார் சாமர்த்தியசாலி? முடிவில்லாத இன்பத்தை உன்னிடமிருந்து நான் பெற்றிருக்கிறேன். நீ என்னிடமிருந்து பெற்றுக்கொண்ட பொருள் யாது? எனது நெஞ்சைக் கோயிலாகக் கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! எனது தந்தையே ஈசனே! நீ என் உடம்பையே இடமாகக் கொண்டிருக்கிறாய்; இந்த உபகாரத்திற்கு நான் செய்யக் கூடிய கைம்மாறு ஒன்றுமில்லை.

## 28. வாழாப் பத்து

நின் பற்றின்றி வேறு ஒரு பற்றும் இல்லாத எளியேன் நின் திருவடியினைப் பிரிந்து ஈண்டுக் கண்ணிமைப் பொழுதும் வாழேன் என்பது வாழாப் பத்து.

பூமியொடு ஆகாசமுமாய் எங்கும் பரந்த எம் ஈசனே! உன்னைத் தவிர வேறு பற்று எனக்கு இல்லை. சிறப்பொடு விளங்குகின்றவனே! சிவபுரத்துக்கு அரசனே! திருப்பெருந்துறையில் உறையும் சிவபெருமானே! என்னை ஆட்கொண்ட நீயே எனக்கு அருள் செய்யாவிட்டால் நான் யாரிடம் இதைச் சொல்லி நொந்து கொள்வேன்? இதை யாருக்கு எடுத்துச் சொல்வேன்? முறையிடுவேன்? பெரிய கடல் சூழ்ந்த உலகத்தில் நான் உயிர் வாழ்கிறேன்; ஆதலால் என்னை 'வருக' என்று அழைத்து நீ அருள் புரிய வேண்டும். பாடல் கீழே உள்ளது.

"பாரொடு விண்ணாய்ப் பரந்த எம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ அருளிலை ஆனால்
வார்கடல் உலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகஎன் றருள்புரி யாயே."

— வாழாப் பத்து 1.

வாழ்கிலேன்; காதல் மேஃசீட்டினால் எழும் பிரிவாற்றாமையாலும் ஆண்டவனைக் கூடும் பேரவாவாலும் உயிர் தரித்தல் இயலாது என்கிறார்.

## 29. அருட் பத்து

மேலாம் திருக்கயிலைக்குச் செல்லும் திருநெறியினை அருளிச் செய்யுமாறு வேண்டுதல் அருட் பத்து.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமால் அறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே."

— அருள் பத்து 1.

இயற்கைப் பேரொளி வடிவானவனே! சுடர் போன்றவனே! எல்லாவற்றையும் விளக்கும் திருவிளக்கே! நெறித்த குழலையும் பெருத்த மார்பகங்களையும் உடைய என்றும் இளமை நீங்காத உமையம்மையாரைத் தன் உடம்பில் ஒரு பாதியாக உடையவனே! மேலான பெரும் பொருளே! வெண்மையான விபூதி அணிந்தவனே! அயனும் அரியும் அறியாவண்ணம் திருவண்ணாமலையில் பேரொளிப் பிழம்பாக விளங்கியருளிய முதற்பொருளே! திருப்பெருந் துறையின் கண் சிவக்குரவனாய் எழுந்தருளி நிறைந்த மலர்களையுடைய குருந்த மர நிழலில் எழுந்தருளிய தூயோனே! வினை முதற் பொருளே! கருணை கூர்ந்து அருள் புரிந்தாய். அடியேன் அழைக்கும் அழைப்பிற்கு இரங்கி அஃது என்ன என்று கேட்டு அருள் புரிவாயாக.

அதெந்து — அஃது என்ன. திசைச் சொல். இதை மலையாளச் சொல்லாகக் கொண்டால் அஃதென்ன என்பது

பொருள். கன்னடச் சொல்லாகக் கொண்டால் அஞ்சாதே என்பது பொருள்.

ஆர்வத்தோடு உன்னை அழைக்கிறேன். எதற்காக அழைக்கிறாய் என்று கேட்பாயாக.

திருவண்ணாமலை ஒரு காலத்தில் எரிமலையாக இருந்து பின்னால் குளிர்ந்ததாகக் கொள்ள வேண்டும். கூம்பு போலக் காட்சியளிக்கிறது. இதன் மீது மரம் செடிகள் அதிகம் காணப்படவில்லை. கார்த்திகை தீபத்தன்று இதன் உச்சியில் கொப்பரையில் நெய், துணி முதலிய எரியும் பொருள்களைப் பெய்து பேரொளிப் பிழம்பாகத் தோன்று மாறு செய்கிறார்கள்.

## 30. திருக்கழுக்குன்றப் பதிகம்

அடிகளார் சிவத்தலங்களைத் தரிசித்துக் கொண்டு, திருக்கழுக்குன்றத்துக்கு எழுந்தருளினார். அங்குச் சிவ பெருமான் சிவனடியாராகத் தோன்றிக் காட்சியளித்தார். அத்திருக் காட்சியினைக் கண்டு களித்து அருளிய பதிக மாகும் இது.

மாறுபாடு இல்லாத திருப்பெருந்துறைப் பெருமானே! உன் திரு நாமங்களை உச்சரிப்பவருக்கு ஒப்பு இல்லாத தாகிய இன்பமே வரும். துன்பங்களை ஒழித்து, எம்பெரு மானே முளைக்கும் தன்மை குன்றாத பிறவியாகிய விதை இனிமேல் முளைக்காதபடி அதாவது இனிமேலும் பிறவி உண்டாகாதவாறு என் இரு வினைகள் ஒத்து வந்த பின்பு நீ திருக்கழுக்குன்றத்தில் எழுந்தருளி அளவற்ற திருக் கோலங்களைக் காட்டி அருளினாய்.

இரு வினை ஒப்பு என்பது நல்வினை தீவினைகளின் பலனாகிய சுக துக்கங்களைச் சமமாகப் பாவித்தலாகிய நிலையாகும். இனி அப்பாடல் வருமாறு :

"பிணக்கி லாதபெரு துறைப்பெரு
மானுன் நாமங்கள் பேசுவார்க்(கு)
இணக்கி லாததோர் இன்ப மேவரும்
துன்ப மேதுடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்விளை
யாமல் என்வினை ஒத்தபின்
கணக்கி லாத்திருக் கோலம் நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே"

— திருக்கழுக்குன்றப் பதிகம்-1.

ஈசுவர விபூதியில் திளைத்திருப்பவர்க்கு ஒப்பில்லாத இன்பம் வரும். துன்பத்துக்கு அங்கு இடமில்லை. தொடர்ந்து பிறவியை உண்டுபண்ணும் அக்ஞானம் என்னும் வித்து பரஞானத்தில் அவிந்து போகிறது. மனம் நடுநிலை எய்துகிறது. கர்மம் ஓய்கிறது. ஈசனது அகண்ட மகிமை வெளியாகிறது.

எம்பிரான் உணக்கில்லாததோர் வித்து. அதாவது பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் அவனது திறமை யாண்டும் அழிந்து போகாதிருந்தது. 'வினை ஒத்த பின்' என்பது மனம் நடுநிலை எய்துங்கால் வினையானது தானே ஓய்வு அடைகிறது.

## 31. கண்ட பத்து

"சாதிகுலம் பிறப்பென்னும் சுழிபட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை அல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென்
னுரைமாய்த்துக்
கோதில்அமு தானானைக் குலாவுதில்லை
கண்டேனே"

— கண்ட பத்து 5

சாதி, குலம், குடிப்பிறப்பு என்னும் சுழலில் அகப்பட்டுத் தடுமாறுகின்ற கதியற்றவனான, எளியேனான என்னை, துன்பத்தைப் போக்கி ஆட்கொண்டருளி, பேதைக் குணத்தையும் இதர தேவதைகளின் தரிசனத்தையும் 'நான்', 'எனது' என்கிற எண்ணங்களையும் போக்கி, குற்றமில்லாத அமிர்தம் ஆகியிருப்பவனை, விளங்குகின்ற தில்லை நகரில் கண்டு கொண்டேன்.

சாதி, குலம், பிறப்பு இவைகள் காரணமாக வருகின்ற உயர்வு தாழ்வுகளைப் பற்றிய எண்ணங்களும், எல்லா உருவங்களும் சிவ ரூபங்கள் என்பதை உணராமல் வேற்றுமை பாராட்டும் புத்தியும் அகங்கார மமகாரங்களும் பேதைமையுள் அடங்கும். மனதில் எண்ணும் கற்பிதமான எண்ணங்களே உபாதிகள் எனப்படுகின்றன.

## 37. பிடித்த பத்து

(திருத்தோணி புரத்தில் செய்யப்பட்டது)

அடிகள் பல சிவத் தலங்களையும் தரிசித்துக் கொண்டு சீர்காழிகு வநது சேர்ந்தார். வழிபட்டார். தில்லை நடராஜனின் எடுத்த பொற்பாத நினைவுவர இதனைப் பாடியருளினார்.

"பால்நினை ந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே."

—பிடித்த பத்து 9.

தன் குழந்தைக்குக் காலமறிந்து பாலை ஊட்டுகிற தாயைக் காட்டிலும் அதிகமாகப் பரிவு கொண்டு நீ பாவியே

ணாகிய எனது உடலை உருகச்செய்து, மனத்தில் ஞான மாகிய ஒளியை அதிகமாக உண்டாக்கி, அழிவில்லாத இன்ப மாகிய தேனைச் சொரிந்து நான் போகும் இடமெல்லாம் என்னுடன் திரிந்த செல்வனே, சிவபெருமானே! நான் உன்னைப் பின் தொடர்ந்து உறுதியாகப் பற்றியுள்ளேன். இதன் மேல் எழுந்தருளுவது எங்கே?

## 51. அச்சோப் பதிகம்

*(தில்லையில் அருளிச் செய்யப்பட்டது)*

*“முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்*
*பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்*
*சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனையாண்ட*
*அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.*

— அச்சோப் பதிகம் 1.

முத்தி மார்க்கத்தைத் தெரிந்து கொள்ளாத அறி வில்லாதவர்களோடு சேர்ந்து அவர்களுடைய வழியில் முயல்கின்ற எனக்கு, பக்தி மார்க்கத்தை உபதேசித்து, எனது பழைய வினைகள் ஓடிப்போகும்வண்ணம் மனத்தின் கண் உள்ள மலங்களைப் போக்கி, சிவரூபமாக்கி என்னை ஆண்டு கொண்ட என் தந்தை எனக்கு அருள் செய்த பேற்றை யார் பெறவல்லார்? இது ஆச்சரியம்.

### நூற் சிறப்பு

*தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி*
*அல்லலறுத் தானந்த மாக்கியதே — எல்லை*
*மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்*
*திருவா சகமென்னும் தேன்.*

*திருச் சிற்றம்பலம்!*

# சைவ சமயம்

சைவ சமயம் இமயம் முதல் குமரி வரை நமது பாரத நாடு முழுவதும் பரவியிருக்கின்றது. தமிழ் நாட்டில் சைவ சிந்தாந்தம் என்றும், கன்னட நாட்டில் வீர சைவம் அல்லது இலிங்காயதம் என்றும், காஷ்மீரத்தில் காஷ்மீர சைவம் அல்லது பிரத்ய பிக்ஞா சைவம் என்றும் சைவ சமயம் ஆங்காங்கே தனிச் சிறப்பாக வழங்கி நிலவி வருகின்றது.

தமிழ்நாட்டில் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் என்னும் சமய ஆசிரியர்களும், மெய்கண்டார், அருள் நந்தி சிவம், மறை ஞான சம்பந்தர், உமாபதி சிவம் என்னும் சந்தான ஆசிரியர்களும், தமிழகத்தில் சைவ சமயத்தைப் பரப்பினர். திருவாவடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள், மதுரை, காஞ்சித் தொண்டை மண்டலம், குன்றங்குடி முதலிய ஆதீனங்கள் தமிழகத்துக்குரிய சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையை வளர்த்து வருகின்றன.

கன்னட நாட்டில் பசுவேசுவரர், சென்ன பசவர், அல்ல மாப்பிரபு, அக்கமாதேவி முதலியவர்களால் பரப்பி வளர்க்கப் பெற்றது இலிங்காயதம் என்னும் வீர சைவ சமய மாகும். வீர சைவம் என்றால் முரட்டுத்தனமும் பிடிவாதமும் கொண்ட சைவம் என்பது பொருளன்று. வீராகமம் என்னும் ஆகமத்தைப் பின் பற்றிய சைவக் கொள்கைக்கே வீர சைவம் என்பது பெயர். வீர சைவ நெறியைப் பின்பற்று

கிறவர்கள், தம்முடைய உடலில் எப்பொழுதும் இலிங்கத்தை அணிந்து கொண்டிருப்பர். ஆதலால் வீர சைவத்திற்கு இலிங்காயதம் என்னும் ஒரு பெயர் வழங்கும். மயிலம், திருக் கோவலூர், திருப்பாதிரிப் புலியூர், விருத்தாசலம், பேரூர், துறையூர் முதலிய இடங்களில் வீரசைவத் திருமடங்கள் விளங்கி வருகின்றன.

இந்தியா முழுவதிலும் சைவ சமயம் பரவியிருந்த போதி லும், தமிழ்நாடு, கன்னடம், காஷ்மீரம் என்னும் பகுதிகளில் சிறப்பாகச் சைவ சமயம் கொள்ளப்பட்டுப் பரவியுள்ளது. காஷ்மீரத்துக்குரிய யுரத்ய பிக்ஞா சைவமானது அபிநவ குப்தர், சோமானந்தர், கல்லடர், வசுகுப்தர் முதலிய சான்றோர்களால் வளர்க்கப் பெற்றதாகும்.

இங்ஙனம் பல பெரியவர்கள் ஆங்காங்கே சைவ சமயத்தை வளர்த்தனராயினும். சைவ சமயம் மிகத் தொன்மை வாய்ந்தது. அஃது ஒருவராலும் தொடங்கித் தோற்றுவிக்கப்பட்டதன்று. ஹராபா, மொகஞ்சதாரோ என்னும் இடங்களில் அகழ்வாராய்ச்சிகள் நிகழ்த்திய சர்ஜான் மார்ஷல் போன்ற பேரறிஞர்கள், 'சைவ சமய மானது உலகத்திலேயே மிகவும் பழமையானஉயிர்ப்பாற்றல் மிக்க சமயமாக இருந்து வருகின்றது' என்று ஆராய்ந்து கூறியுள்ளார்.

ஆராய்ச்சியாளர் மனித வரலாற்றைப் பலகாலங்களாக பிரித்துள்ளனர். 'பழைய கற்காலத்திலேயே சிவலிங்க வழிபாடு இருந்து வந்தமை தெரிகின்றது' என்று வரலாற்றுப் பேராசிரியாகிய திரு. பி.டி. ஸ்ரீனிவாச ஐயங்கார் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

வட அமெரிக்காவில் கொலரடோ என்னும் இடத்தில் உள்ள ஒரு குன்றின்மீது ஒரு சிவன் கோயிலும் அதில் ஒரு பெரும் சிவலிங்கமும் 1937 ஆம் ஆண்டில் ஆராய்ச்சியாளர் களால் கண்டுபிடிக்கப்பட்டன. அக்கோயில், பதினாயிரம்

ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருத்தல் வேண்டும் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

சிவலிங்க வழிபாடு இந்தியாவில் மட்டுமேயன்றி உலக நாடுகள் பலவற்றிலும் பரவியிருந்தது என்று மேலை நாட்டு அறிஞர்கள் கூறுகின்றனர். இங்கிலாந்தில் செயிண்ட் பால் கதீட்ரல் என்னும் கிறுத்துவக் கோயிலில் ஓரிடத்தில் இன்றும் கூட ஒரு சிவலிங்கம் இருந்து வருவதாகக் கூறுகின்றனர்.

பௌத்த மதத்தில் ஒரு பிரிவான ஷிண்டோயிசம் என்பதில் சிவலிங்கத் திருவுருவத்திற்குப் பெருமதிப்புத் தரப் பெற்று வருகின்றது. மேடம் பிளவட்ஸ்கி அம்மையார் எழுதிய 'மறைவு இயற் கொள்கை' (Secret Doctrine) என்னும் நூலில் விளக்கியுள்ள லிபிகா என்னும் அடையாளம் சிவலிங்கமே என்று கூறுகின்றனர்.

வடக்கே இமயமலைக்கு அருகேயுள்ள அமரநாதம் என்னும் புனிதத் தலத்தில், இயற்கையாகவே - பனிக்கட்டியினால் சிவலிங்கத் திருவுருவம், ஆறு மாதத்திற்கு ஒருமுறை உருவாகிக் கரைந்து வருகினறது இவ்வுடம்பையே, 'மானிடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்' என்று திருமூலர் போன்ற ஞானிகள், தம்முடைய யோகக் காட்சியிற் கண்டு விளக்கியுள்ளார். இந்திய நாடு முழுவதிலும் உள்ள பல்லாயிரக் கணக்கான கோயில்களின் கருவறைகளில் சிவலிங்கமே அமைந்து காணப்படுகிறது. இறைவன் உருவம், அருவம், உருவாருவம் என்னும் மூன்று நிலைகளிலும் விளங்குகிறான் என்பதனைச் சிவலிங்கம் உணர்த்துகின்றது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சங்க கால இலக்கியங்களில் சிவபெருமானைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. ஆலமர் கடவுள், ஆலமர் செல்வர், ஆனேற்றுக் கொடியோன், சூலம் பிடித்த சுடர்ப்படைக் கடவுள், பிறங்கு நீர் சடைக் கரத்தான், மழுவாள் நெடி

யோன், மலையுறை கடவுள், பிறவா யாக்கைப் பெரியோன், என்றெல்லாம் சங்க இலக்கியங்களில் சிவபெருமானைப் பற்றிய குறிப்புக்கள் வருகினறன.

'நுதல்விழி நாட்டத்து இறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக'

— என வரும் மணிமேகலை வரிகளால், கடவுளரில் சிவபெருமானே முதன்மையும் தலைமையும் அக்காலத்திற் பெற்றிருந்தான் என்று தெரிகின்றது.

'நமசிவாய' அல்லது 'சிவாயநம' என்னும் திரு ஐந்தெழுத்து மந்திரம், வேதத்தின் நடு நாயகமாக உள்ள யஜுர் வேதத்தின் நடு இடத்தில் அமைந்து விளங்குகின்றது. ஈசாவாசியம், சுவேதாசுவதரம், மாண்டுக்யம், கேனம், கடம் முதலிய உப நிடதங்களிலும், காரணம், வாதுளம், காமிகம் முதலிய சைவ ஆகமங்களிலும் சைவ சமய உண்மைகள் பேசப்படுகின்றன.

சைவ சமயத்தின் பெருமைக்கு, அதன் கோயில்கள் (Temples), தெய்வீக நூல்கள் (Scriptures), அருளாளர்கள் (Saints) என்னும் மூன்றும் சிறந்த காரணங்களாகும். சைவ சமயத்தில் தேவாரப் பாடல் பெற்றனவும், 1300 ஆண்டு களுக்கு முற்பட்டனவுமாகிய தலங்களில் கோயில்கள் 274 உள்ளன. அவற்றுள் ஒவ்வொரு தலத்திற்கும் கோயிலுக்கும் தனித் தனியான பல சிறப்பியல்புகள் உண்டு.

அக்கோயில்களின் கட்டடக் கலை, சிற்பக் கலை, முதலியன சிறப்பு வாய்ந்தவை. அக்கோயில்களில் இசை, நடனம், நாட்டியம், நாடகம், ஓவியம் முதலிய கலைகள் பலவும் வளர்ந்தன. வளர்ந்து வருகின்றன. பஞ்ச பூதத் தலங்கள், அட்ட வீரட்டத் தலங்கள், சப்த விடங்கத் தலங்கள், ஜோதிர் லிங்கத் தலங்கள், ஆறுபடை வீடுகள், கனகசபை முதலிய பஞ்ச சபைக் கோயில்கள் ஆகியவை, மிகவும் சிறப்புடையவை. அவற்றிற்கும் வரலாறுகளும், இலக்கியங்களும் பாரம்பரியப் பெருமைகளும் உண்டு.

தமிழகச் சைவ சமயத்தில் பன்னிரண்டு திருமுறைகள் என்னும் பெயரில் பல்லாயிரக்கணக்கான தெய்வீகப் பாடல்கள் உள்ளன. அவைகளை அடுத்து பட்டினத்தார், அருணகிரிநாதர், தாயுமானவர், இராமலிங்கர், பாம்பன் சுவாமிகள் போன்ற ஞானிகளும் அருளாளர்களும் பாடிய பாடல்கள், ஆயிரக்கணக்கில் அமைந்திருக்கின்றன.

தேவார திருவாசகத் திருமுறைகள் உலகிலேயே சிறந்த பக்தி இலக்கியங்களாக மதித்துப் போற்றப்படுகின்றன. திரு வாசகம் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளது. பெரிய புராணம் போன்ற சிறந்த அடியார் வரலாற்று நூல் (Haglology), அழகிய கவிதையில், அழியாத நிலையில், வேறு பிற சமயங்களில் இருப்பதாகத் தெரியவில்லை. அவ் வாறே சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற அரும்பெரும் சைவ சித்தாந்தத் தத்துவ நூல்களும், திரு மூலர் திருமந்திரம் போன்ற யோகஞான அனுபவ விளக்கம் நூல்களும், சைவ சமயத்திற்குப் பெரும் சிறப்பை விளைவிக் கின்றன.

— ந.ரா. முருகவேள் அவர்கள் MA

— நன்றி ஞானபூமி ஆண்டு மலர் 1983.

# புகழ் மாலை

மாணிக்கவாசக சுவாமிகளைப் போற்றி துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய இந்த 10 பாடல்களும் அவர் எழுதிய நாலவர் நான்மணியில் உள்ளன. இப்பாடல்கள் மாணிக்கவாசக சுவாமிகள் இயற்றிய திருவாசகத்தின் மேன்மையைப் பாராட்டுகின்றன.

**அகவல்**

1. விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரையெனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது என்கு வீராயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவா சகம்இங் கொருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியின் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகின் மற்றையர் இலரே.

**குறிப்பு**

வேதத்தைக் காட்டிலும் திருவாசகம் மக்கள் மனதை உருக்க வல்லது என்று கூறுகின்றார்.

2. பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ள
மூழ்கிய புனிதன் மொழிந்தவா சகமே
வாசகம் அதற்கு வாச்சியம்
தூசகல் அல்குல்வேய்த் தோளிடத் தவனே.

அதாவது திருவாசகம் சிவபெருமானையே தெய்வமெனக் கொண்டாடுகிறது என்பதாம்.

3. கடல்நிற வண்ணன் கண்ணொன் றிடந்து
மறைச்சிலம் பரற்று மலரடிக் கணியப்
பரிதி கொடுத்த சுருதி நாயகற்கு
முடிவிளக் கெரித்துங் கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கண் துணைவியை அளித்தும்
அருமகன் நறும்பூங் கருமயிர் உதவியும்
நென்முளை வாரி இன்னமுது அருத்தியும்
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்
அகப்படு மணிமீன் அரற்கென விடுத்தும்
பூட்டி அரிவாள் ஊட்டி அரிந்தும்
தலையிடை ஒளிக்கும் சிலையிடை மோதியும்
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்தும்
தந்தையைத் தடிந்து மைந்தனைக் கொன்றும்
குற்றம் செய்த சுற்றம் களைந்தும்
பூக்கொளு மாதர் மூக்கினை அரிந்தும்
இளமுலை மாதர் வளமை துறந்தும்
பண்டைநாள் ஒருசிலர் தொண்டர் ஆயினர்
செங்கண்மால் தடக்கையில் சங்கம் நாண
முள்தாள் தாமரை முறுக்கவிழ் மலர்மேல்
வலம்புரி கிடக்கும் வாதவூர் அன்ப
பாடும் பணிநீ கூடும் பொருட்டு
மதுரை நகரில் குதிரை மாறியும்
விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்தும்
நீற்றெழில் மேனியில் மாற்றடி பட்டும்
நின்னைத் தொண்டன் என்னக் கொண்டனன்

இருக்கும் அடுக்கல் அரக்கன் எடுப்ப
முலைபொர வரைபொரு மொய்ம்பின்
மலைமகள் தழுவ மனமகிழ் வோனே.

பெரிய புராணத்தில் 63 நாயன்மார்கள் வரலாறுகள் கூறப் படுகின்றன. அவர்கள் பல தியாகங்களைச் செய்து சிவ பெருமானுக்குத் தொண்டராயினர். ஆனால் அதே சிவ பெருமான் மாணிக்கவாசகருக்காக மண் சுமந்தும் பிரம்படி பட்டும் அவரைத் தனக்குத் தொண்டராக்கிக் கொண்டார் என்று மாணிக்கவாசகரின் பெருமையைப் புகழ்கின்றார்.

4. வலமழு உயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடல்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசகன் எனும்ஒரு மாமழை பொழிந்த
திருவா சகம்எனும் பெருநீர் ஒழுகி
ஓதுவார் மனமெனும் ஒண்குளம் புகுந்து
நாவெனும் மதகில் நடந்து கேட்போர்
செவியெனும் மடையில் செவ்விதின் செல்லா
உளமெனும் நிலம்புக ஊன்றிய அன்பாம்
வித்தில் சிவமெனும் மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் தருமே.

மாணிக்கவாசகம் என்னும் மாமழை பொழிந்த திரு வாசகம் என்னும் நதி பாய்ந்து மக்களுக்கு முத்திப்பயனை அளிக்கும் என்கிறார்.

5. வேண்டுநின் அடியார் மெய்யன்பு எனக்கும்
அருள்செய் சிவனே அலந்தேன் அந்தோ
முறையோ முறையோ இறையோ னேயென்று
அழுது செம்பொன் அம்பலக் கூத்தன்
அருளால் பெற்ற அன்பினில் ஒருசிறிது
அடிய னேற்கும் அருளல் வேண்டும்

நீயே கோடல் நின்னருட் பெருக்கிற்கு
ஏற்றது அன்றுஇள ஏறுகந்து ஏறியைப்
பரிமா மிசைவரப் பண்ணிய வித்தக
திருந்திய வேதச் சிரபொருள் முழுதும்
பெருந்துறை இடத்துப் பெருஞ்சீர்
குருந்துறு நீழலிற் கொள்ளைகொள் வோயே.

மாணிக்கவாசகப் பெருமானே! சிவபெருமானை ஏவல் கொண்டு அவனிடத்துப் பெற்ற அன்பில் எனக்கும் ஒரு சிறிது தரமாட்டாயோ எனக் கேட்கின்றார்.

6. நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கும் மதுர வாசக
கலங்குறு புனலெறி விலங்குறு வீர
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனும் உணரான் அஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணில்
கண்களோ ஒன்று காலையில் காணும்
மாலையில் ஒன்று வயங்கித் தோன்றும்
பழிப்பின் ஒன்று விழிப்பின் எரியும்
ஆயினும் தன்னை நீ புகழ்ந் துரைத்த
பழுதில் செய்யுள் எழுதினன் அதனால்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி யறியா என்பு அணிவானே.

இதன் பொருள்: மாணிக்கவாசக! நீ பாடிய திருவாசகப் பாடலைச் சிவபெருமான் தன் கைப்பட எழுதிக் கொண் டான். அவன் புகழ்ச்சி விருப்பன் போலும் என்று இறை வனை நிந்தாஸ்துதியாகப் பாடுகின்றார்.

7. பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரின் அழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்

களிகூர்ந்து உள்ளக் கவலை தீர்ந்தேனே
அன்னம் ஆடும் அகன்துறைப் பொய்கை
வாதவூர் அன்ப ஆத லாலே
தெய்வப் புலமைத் திருவள்ளுவனார்
'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலரெனும்'
செஞ்சொற் பொருளின் தேற்றறிந் தேனே.

திருவாதவூர் அன்பரே! சிவபெருமானது தெய்வத் திருவருளைப் பெற்றிருந்தும் அதைப் பெறாதார் போன்று வாடி நிற்கின்றீர். யான் அவ்வருளைப் பெறாதிருந்தும் பெற்றவர் போன்று பெரிதும் மகிழ்ந்திருக்கின்றேன். திருவள்ளுவர் மேற்படி குறளில், "நன்மை அறிந்தவரைவிடக் கயவரே நல்ல பேறு உடையவர்; ஏன் என்றால் கயவர் தம் நெஞ்சில் எதைப் பற்றியும் கவலையில்லாதவர்" என்று கூறியுள்ளார். இந்தக் குறள் கருத்து எனக்கு ஒத்திருக்கிறது என்கிறார்.

8. திருவார் பெருந்துறை செழுமலர்க் குருந்தின்
நிழல்வா யுண்ட நிகரில்ஆ னந்தத்
தேன்தேக் கெறியும் செய்ய மாணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்
யாவரும் ஓதும் இயற்கைத் தாதலின்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை
மட்கல நிகர்க்கும் மதுர வாசகம்
ஓதின் முத்தி உறுபயன்
வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே.

திருவாசகத்தை எவரும் படிக்கலாம். ஆதலின் அது பொற்கலம் போன்றது. அந்தணர் மட்டும் படிக்கக்கூடிய நால் வேதங்கள் மட்கலம் போன்றவை. திருவாசகம் வீடு பேற்றை அளிக்க வல்லது. வேதம் ஓதின் விண்ணுலகாதி பதங்களைப் பெறலாம்.

9. தானே முத்தி தருகுவன் சிவனவன்
அடியன் வாத வூரனைக்
கடிவின் மனத்தால் கட்டவல் லார்க்கே.

திருவாதவூரடிகளை உள்ளத்தால் நேசிப்பவர்க்குச் சிவபெருமான் தாமே முற்பட்டுப் பரமுத்தியைத் தந்தருளு வார்.

10. செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூர் அன்ப
பாவெனப் படுவதுன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே.

திருவாதவூரரே! பூவெனப் படுவது செந்தாமரை மலரேயாம். அதுபோல பாவெனப்படுவது தேவரீர் அருளிய திருப்பாடல்களே.

—நால்வர் நான்மணிமாலை.

# நம்மாழ்வார்

## அவதார மகிமை

வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்த இவர் திருவரங்கனால் 'நம்மாழ்வார்' எனப் பாராட்டப்பட்டார். இவர் தம் பாசுரங்களைக் கொண்டு இராமானுஜர் ஸ்ரீ பாஷ்ய சூத்திரங்களுக்குப் பொருள் அருளினார். இவர் அவதரித்ததுமே சடமென்னும் வாயுவை முனிந்ததால் 'சடகோபன்' எனப் பெயர் பெற்றார். பிறந்ததும் அழுவது, தாய்ப்பால் அருந்துவது, முதலியவான உலக இயற்கைக்கு மாறாக இருந்ததால் 'மாறன்' எனப் பெயர் பெற்றார். முப்பத்தைந்து ஆண்டுக்காலம் பெருமானை நினைத்திருந்து பின்பு பரமபதம் சேர்ந்தார்.

பாண்டிய நாட்டில் தாம்பிரபரணி நதிக்கரையில் திருக்குருகூரில் மறந்தும் புறத்தொழாது குடி குடி வழிவந்து ஆட்செய்யும் வேளாளர் குலத்தில் பொற்காரியார் என்பவர் வாழ்ந்து வந்தார். அவர் தமது புத்திரரான காரியாருக்குத் திருவண் பரிகாரத்திலுள்ள திருவாழ்மார்பர் புத்திரியான உடைய நங்கையாரைத் திருமணம் செய்வித்தார். காரியாரும் தமது மனைவியுடன் இல்லறம் நடத்தி வந்தார். ஒரு சமயம் தமது இல்லாளைப் பிறந்தகம் அழைத்துப் போய் மீண்டும் வரும்போது திருக்குறுங்குடியில் எம்பெருமானைச் சேவித்து, தமக்கு மகப்பேறு அருளுமாறு வேண்டி நிற்க, எம்பெரு

மானும், 'நாமே வந்து பிறக்கிறோம்' என்று விக்கிரகமூர்த்தி அருளிச் செய்தார்.

உடைய நங்கையார் கர்ப்பவதியானார். எம்பெருமான் சேனை முதலியாரை நம்மாழ்வாராக அவதரிக்கும்படி திருவுளங்கொண்டார். அவ்வாறே வெகுதான்ய வருடம் வைகாசி மாதம் பௌர்ணமியும் வைசாக நட்சத்திரமும் கூடிய நன்னாளில் குழந்தை பிறந்தது. திருவனந்தாழ் வானும் இவருக்கு முன்னே திருப்புள்ளியாழ்வராய் வந்து அவதரித்தருளினார்.

குழந்தை பிறந்ததும் அழாமலும் பாலுண்ணாமலும் மௌனமாய்இருந்தது. வாட்டமில்லாமல் பரிபூர்ணராயிருந்த குழந்தையைக் கண்டு தாய் தந்தையர்கள் பொலிந்து நின்ற பிரான் திருமுன்பு எடுத்துக் கொண்டுபோய் சேவிக்கப் பண்ணினர். திருப்புள்ளியாழ்வார் அடியில் ஆணிப் பொன்னால் செய்த வண்ணச் சிறு தொட்டிலில் வளர்த்தி, பயபக்தியோடு சேவித்து வந்தனர்.

## மதுரகவி சீடராதல்

குழந்தை, திருப்புள்ளி யாழ்வார் அடியில் பதினாறு ஆண்டுகள் 'அவன் முகத்தன்றி விழியேன்' என்றுகண்களை மூடி, 'ஆருக்கு என் சொல்கேன்' என்று மௌனியாய் எழுந் தருளியிருந்தார். அயோத்தி சென்ற மதுரகவிகள் தென் திசையில் சூரிய உதயம் ஆனாற் போல ஒரு பேரொளியைக் கண்டுதிகைத்தார். அதைச் சோதிக்கப் புறப்பட்டு, பகலெல் லாம் கண்வளர்ந்தருளி இரவுகளில் அந்த ஒளியைக் குறியாகக் கொண்டு மிக விரைவாகப் புண்ணிய தலங்கள் தோறும் சென்று சோதித்தார். திருவரங்கத்திற்கும் தெற்கே அந்தப் பேரொளி இருக்கக்கண்டு திருக்குருகூரிற் சென்று, அப்பால் பார்த்துக் காணாராயினார். இது இங்குதான் இருக்கும் என்று நிச்சயித்து, உறங்காப்புளி நிழலில் பூரண

சந்திரனைப் போலப் பதுமாசனத்தமர்ந்து மவுனமாய் கண் மூடியிருக்கும் பராங்குசரைப் பார்த்தார்.

இவருக்குக் காது கேட்குமோ என்று அறிய ஒரு குண்டுக் கல்லைத் திடீரென்று போட்டார். இவரும் திருக்கண்களை விழித்துப் பார்த்தார். இவருக்கு வாக்குண்டோ என்பதை அறியச் 'செத்ததின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?' என்று கேட்டார். ஆழ்வாரும், 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்?' என்றார்.

**வினா :** 'அநித்தியமான உடலில் ஜீவன் தோய்ந்தால் அது அனுபவிப்பது எது? வாழ்வது எங்கே?' என்பது கருத்து.

**விடை:** 'அதையே தின்று அங்கேயே கிடக்கும்; அதாவது அநித்தியமான சரீரத்தைப் பற்றி, சப்த, ஸ்பரிச, ரச, ரூப, கந்தாதிகளால் வரும் சுக துக்கங்களையே அனுபவித்து, சரீரத்திலேயே உழலும் என்பதாம்.

மதுரகவிகள், நம்மாழ்வார் திருவடிகளில் வணங்கி, மேவினேன் அவன் பொன்னடி மெய்ம்மையே என்று தியானித்தார். எம்பெருமானும் பெரிய திருவடி மீது எழுந்தருளி சேவை சாதித்து, ஆழ்வாருக்கு மயர்வற மதிநலம் அருளினன். ஆழ்வாரும் அனுபவித்து, அவ்வனுபவ இன்பம் உள்ளடங்காமல் ரிக், யஜுர், சாம, அதர்வண வேத சாரத்தை முறையே திருவிருத்தம், திருவாசிரியம், திருவாய் மொழி திருவாசிரியம் என்ற திவ்விய பிரபந்தங்களாக அருளிச் செய்தார்.

மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரை ஆசிரியராகக் கொண்டு,

"கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமா யன்என் னப்பனில்
நண்ணித் தென்குரு கூர்நம்பி என்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறும்என் நாவுக்கே"

என்று துவங்கும் 11 பாடல்களைப் பாடியுள்ளார். அவை யாவும் நம்மாழ்வாரையே சதமெனக் கொண்டு அவரது புகழையே பாடுவனவாகும். இப்பாடல்கள் கலிவிருத்தம் என்னும் பாவகையைச் சார்ந்தவை. அந்தாதித் தொடையால் இயன்றவை.

## எம்பெருமான்கள் காட்சியளித்தல்

இறைவனது நிலை, உயிர்களது நிலை, இறைவனை அடையும் வழி, இதற்கு இடையூறாகிய துன்பம், இறைவனை அடைந்து உய்தல் ஆகிய இவை அர்த்த பஞ்சகம் எனப்பெறும். இவற்றை ஆழ்வார் அருளினார். திருமாலைத் தம் மனத்துள் இருத்திக் கலி தம்மை நாடாவண்ணம் விளங்கும் ஆழ்வாருக்குப் பூமியிலுள்ள திருப்பதிகளில் உறையும் எம்பெருமான்கள் காட்சியருளினர்.

## வீடு பெற்றது

ஆழ்வார் பரமபதத்தை நினைந்தார். ஆழ்வாரை, அவர்தம் திருமேனியோடே பரமபதத்திற்கு எழுந்தருள்விக்க மதுரகவி விரும்பினார். இறைவனும் ஆழ்வாரை அவரது திருமேனியோடே உகந்தான். 'இநத உடலை நீக்கிப் பின் என்னை அழைத்துச் செல்க' என வேண்டினார் ஆழ்வார். ஆழ்வாரை எதிர்கொள்ள வானில் அடியார் திரண்டனர். இறைவன் பெரிய திருவடி மீது பிராட்டியோடு எழுந்தருளினன். மேலிருந்து வந்த சோதியுடன் ஆழ்வாரது திருமேனியிலுள்ள சோதி கலக்க மதுரகவியாழ்வார் கண்டார். சூரியன் சந்திரன் ஆகிய இரண்டையும்விட ஒளி மல்கிய ஆழ்வாரது அர்ச்சைத் திருமேனியை (விக்கிரகத்தை) வானவர் மதுரகவியாழ்வாரிடம் அளித்தனர். மதுரகவியார் ஆழ்வாருக்குத் திருக்கோயில் எழுப்பி நித்திய நைமித்தியங்கள் குறையறச் செய்தார்.

நம்மாழ்வார் திருவுரு திருவீதியிற் பவனிவர மதுரகவியார் விருது ஓதுவார். சிலர் ஆழ்வார்தம் பிரபந்தங்கள்

சங்கம் சேர்ந்தனவோ எனக் கேட்டனர். மதுரகவியார் தயங்கினார். நம்மாழ்வார் ஒரு வேதியர் உருவில் தோன்றி ஒரு முறியில் 'கண்ணன் கழலிணை' என்னும் பாடலை எழுதிக் கொடுங்கள் என்றார்.

அவ்வோலையைச் சங்கத்தின் பொற்பலகை மீது வைத்தனர். அது அப்பலகையில் பொருந்தியிருக்க புலவர்கள் அப்பலகையிலிருந்து பொற்றாமரைக் குளத்தில் ஆழ்ந்தனர். பின்னர் அப்புலவர்கள் அகந்தை நீங்கி ஆழ்வாரைப் போற்றினர்.

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ—தாமம்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெருமான் உனக்கு"

என்று புலவர்கள் பாடினர்.

### இவரது வேறு பெயர்கள்

இவரது பெற்றோர் இவருக்கு இட்ட பெயர் 'மாறன்' என்பது. இறைவனால் 'நம்மாழ்வார்' என்று அழைக்கப் பட்டார். சடத்தைக் கோபித்த காரணத்தால் 'சடகோபன்' என்றும், பிற மதங்களாகிய யானைகளுக்கு இவர் அங்குசம் போன்றவர். ஆதலின் 'பராங்குசர்' என்றும், மகிழம்பூவை அணிபவராதலின் 'வகுளாபரணம்' என்றும், திருக்குருகூரில் பிறந்தவராதலின் 'குருகைக் காவலர்' என்றும் இவரை அழைப்பர். வைணவர் இவரை 'வேதம தமிழ் செய்த பிரான்' என்றும் 'திருவாய் மொழிப் பெருமான்' என்றும் 'திருவழுதி வளநாடர்' என்றும் கொண்டாடுகின்றனர்.

இவர் தமிழ்நாட்டின் தனிப்பெருங் கவியாவார். பக்தி, ஞானம், வைராக்கியம், தெய்வீகக் கருமம் முதலியவற்றை நம் தமிழ்நாட்டில் பரவச் செய்தவர். சமரச நோக்குடையவர். இவரது சமரச ஞானத்தைப் பற்றியும் அகப்பொருள் துறையமைந்த கருத்துக்களையும் பின்வரும் பகுதிகளில் காணலாம்.

### இவரது காலம்

பேராசிரியர் K. A. நீலகண்ட சாஸ்திரியார் நம்மாழ்வாரையும் மதுரகவியாழ்வாரையும் கி.பி. 9-ம் நூற்றாண்டில் வாழ்ந்த கடைசி ஆழ்வார்களாகக் கூறியுள்ளார். நம்மாழ்வார் மற்ற ஆழ்வார்களை அவயவமாகக் கொண்டவர் என்றும் கூறுவதால் இவர் ஆழ்வார்களுள் காலத்தால் பிற்பட்டவர் என்று கூறுதல் பொருந்தும்.

| இவர் செய்த நூல்கள் | பாடல் எண் | பாசுரங்கள் |
| --- | --- | --- |
| 1. திருவிருத்தம் (ரிக்வேதசாரம்) | (2478—2577) | 100 |
| 2. திருவாசிரியம் (யஜுர்வேதசாரம்) | (2578—2584) | 7 |
| 3. பெரியதிருவந்தாதி (அதர்வண வேத சாரம்) | (2585—2671) | 87 |
| 4. திருவாய்மொழி (சாமவேதசாரம்) | (2675—3776) | 1102 |
| | ஆக மொத்தம் | 1296 |

'பக்தர்க்கு அமுதமாய், மக்கள் அனைவரும் விரும்பியேற்பதாய், சகல அர்த்தங்களையும் அளிப்பதாய் ஆயிரமாகப் பணைத்த உபநிடதங்களோடு கூடியதாய், ஸ்ரீ சடகோபரது வாக்குகளாலான தமிழ் வேதசாரத்தை நான் வணங்குகிறேன்' என நாதமுனிகள் கூறுகின்றார்.

### புகழ்மாலை

மதுரகவியாழ்வார் இவரைப் பற்றிப் பாடிய 11 பாடல்களின் கருத்துக்களைக் கீழே தருகின்றோம். அவை யாவும் நம்மாழ்வாரின் தெய்வீகச் சிறப்பினை எடுத்து ஓதுகின்றன. மதுரகவியாழ்வார், நம்மாழ்வார் கூறிய விடையின் நுட்பத்தை அறிந்து அவரது பாதங்களில் விழுந்து வணங்கி "உத்தமனே! உடைமை உறவும் உலகில் ஒன்றும் நாடேன் அடையும் உறவும், இருநிதியும் அடியேனுக்கு நீயே ஆவாய்,

நான் இவ்விடத்தை விட்டு அகலேன்'' என்று அங்கேயே பொருந்தியிருந்தார். ஆழ்வாரையே சரணாக அடைந்தார். ஆழ்வார்க்கு முன்னம் மதுரகவிகள் அவதரித்தது சூரியனுக்கு முன் அருணன் உதிப்பது போன்றது.

நம்மாழ்வார் மதுரகவிக்கு, இறைவனது நிலை, உயிர்களது நிலை, இறைவனை அடையும் வழி, இதற்கு இடையூறாகிய துன்பம், இறைவனை அடைந்துய்தல் ஆகியவற்றை அருளினார். இவை அர்த்த பஞ்சகம் எனப்படும்.

### மதுரகவியார் செய்த நூல்கள்

இவர் 'கண்ணிநுண் சிறுத்தாம்பினால்' என்று துவங்கும் 11 பாடல்களைப் பாடியுள்ளார். அவை யாவும் நம்மாழ்வாரையே சதமெனக் கொண்டு அவரது புகழையே பாடுவனவாகும். இப்பாடல்கள் கவிவிருத்தம் என்னும் பாவகையைச் சார்ந்தவை. அந்தாதித் தொடையால் இயன்றவை.

### அவைகளின் பொருள் வருமாறு

937. *சிறிய கயிற்றினால் கட்டுண்ட பெருமான், என் தலைவனாகிய சடகோபன் உருவில் வந்து தென் குருகூர் நம்பி என்றபோது இனிக்கிறது. என் நாவில் அமுதூறுகின்றது.*

938. *நாவினால் அவன் புகழைப் பாடி இன்பமெய்தினேன். அவனுடைய பாதங்களையே மெய்ப் பொருளாக அடைந்தேன். வேறு தெய்வத்தை யான் அறியேன். குருகூர் நம்பியனது பாடல்களது இன்னிசையை பாடித் திரிவேன்.*

939. *அவ்வாறு திரிந்தாகிலும் தேவர் தலைவனது கரிய திருவுருவத்தைக் காண்பேன். பெரியவனான குருகூர் நம்பிக்குத் தொண்டு செய்வதுதான் யான் பெற்ற நன்மை.*

940. நலம் வாய்ந்த நான்மறையாளர்கள் என்னை இழிவாகக் கருதினாலும் தாயாகவும் தந்தையாகவும் என்னை யாட்கொண்ட தன்மையுடையவன். அவன் சடகோபனாகிய சிறப்புடையவன்.

941. பிறருடைய பொருளையும் மாதர்களையும் முன்பு நம்பியிருந்தேன். தற்போது செம்பொன் மாடங்களை யுடைய திருக்குருகூர் நம்பிக்கு அன்பனாய் அடியேன் பெருமை பெற்றேன்.

942. இன்று முதல் எழு பிறப்பும் நம்மாழ்வாராகிய என் தலைவன், அவனது புகழை ஏத்த அருள் செய்தான். அவன் எப்போதும் என்னைக் கைவிட மாட்டான் காண்மின்.

943. என்னை இன்னானென்று அறிந்து காரிமாறன் என்னுடைய பழ வினைகளை நீக்கியருளினான். இதை எல்லோரும் அறியுமாறு சொல்லுவேன். தமிழ்ச் சடகோபனது பேரருளாகும் இது.

944. அருள் பெற்று மகிழ்ந்து ஆடுகின்ற அடியார்கள் இன்புறுமாறு அருமறையின் பொருளை அருள் செய்தான்; திருவாய் மொழி ஆயிரம் பாடல்களைப் பாடினான். மேலான பேரருள் இதுவேயாகும்.

945. வேதியர்கள் ஓதும் வேதத்தின் உட்பொருளை என் மனத்தில் நிறுத்தினான். என் தலைவனாகிய சடகோபனுக்கு நான் செய்த பயன் இதுவேயாகும்.

946. நற்பயன் தரவில்லையென்றிலும் பாங்காவதற்கு உரியரல்லர் ஆகிலும், செயல் நன்றாகுமாறு திருத்திப் பணி கொள்வான். குருகூரில் எழுந்தருளிய என் தலைவனுடைய பாதங்களுக்கே அன்பு செய்ய முயல்கின்றேன்.

947. நம்மாழ்வார் தம்மை வந்து அடைந்தவர்கட்கு எல்லாம் அன்பன். அத்தகைய தென் குருகூர்

நம்பிக்கு அன்பனாகிய மதுரகவி சொன்ன சொற்களை நம்புகின்றவர்கள் நற்கதி பெறுவார்கள்.

மற்றொன்றினையும் அறியாதவராய் சடகோபருடைய உபநிடதங்களைப் பாடுவதை மட்டுமே அனுபவமாகவுடையவராய் அவருடைய குணத்தினால் அவர் ஒருவரையே பிரானாகக் கொண்ட மதுரகவி பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராகப் போற்றப்படுகிறார்.

**ஒப்புமைப் பகுதி :**

நம்மாழ்வார் வேளாளர் — மதுரகவியார் பிராமணர். பக்தர்களுள் சாதி பேதங்கள் கருதாமல் தொண்டு செய்து பேறு பெற்றார் மதுரகவிராயர். சைவத்திலும் இதுபோன்ற குரு சிஷ்ய ஒற்றுமை இருக்கிறது. திருநாவுக்கரசர் வேளாளர். அப்பூதியடிகள் பிராமணர். அப்பூதியடிகள் வேறு தெய்வங்களை வழிபடாமல் திருநாவுக்கரசரை வணங்கி நற்கதி பெற்றார். நாயன்மார்களுள் ஒருவராகப் போற்றப்படுகிறார்.

**பிரிவாற்றாமை**

நம்மாழ்வார் பாடிய திருவாய் மொழி 1102 பாடல்களைக் கொண்டது. அது பத்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அடுத்த தலைப்பில் திருவாய் மொழியிலுள்ள பத்து பகுதியிலும் சில பாடல்கள் விளக்கவுரைகள் தரப்படுகின்றன.

இரண்டாம் பத்து அகப்பொருள் பற்றியது இறைவனை வழிபடுவதற்கு அகப்பொருள் எவ்வாறு பயன்படுத்தப்படுகிறது என்பதை இங்குக் காண்போம்.

மக்கள் அடைய வேண்டுவனவாகிய உறுதிப் பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இன்பத்தை அகமெனவும் ஏனைய மூன்றையும் புறமெனவும் பகுத்துக் கூறுவர் தமிழர். அகமாவது

தலைவனாலும் தலைவியாலும் எப்போதும் உள்ளத்து உணர்வாலேயே அனுபவிக்கக் கூடியதாய் இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கமாகும். புறமாவது எல்லோராலும் அனுபவித்து உணரப்பட்டு இது இவ்வாறு இருந்தது எனப் பிறருக்குக் கூறப்படுவதாய் புறத்தே நிகழும் ஒழுக்கமாகும்.

அகத்திணையில் குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என ஐந்து நிலங்களும் அவைகளின் முறையே புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் என்னும் ஐந்து ஒழுக்கங்களும் கூறப்படும். இரங்கல் துறையாக வரும் பாடல்களில் கீழ்க்காணும் செய்திகளைக் காணலாம்.

மாலைக் காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு ஆயர் ஊதும் குழலோசையும், பசுவின் கழுத்திற் கட்டியுள்ள மணியோசையும் பெருந் துன்பம் தரும். காலைப் பொழுதில் இரை தேடச் சென்ற விலங்குகளும், பறவைகளும் தத்தம் துணையை எண்ணித் திரும்பி வருதலையும், மாலைப் பொழுதில் உண்டாகும் நிலாத் தோற்றம் முதலியவை களையும் கண்டு தலைவனைப் பிரிந்த தலைவி ஆற்றாமை மீக்கூர்தலும் இரவில் ஊரெல்லாம் உறங்கும் நிலையில் அவள் உறக்கங் கொள்ளாது அன்றிற் குரல், கடலோசை முதலியவற்றைக் கேட்குங்கால் அங்ஙனமே துன்புறுதலும் இயல்பாகும். தலைவி கூற்றாக வரும் இரங்கற் பாக்கள் பழந்தமிழ் மக்களின் கற்பு நிலைமையை நன்கு விளக்கு கின்றன.

உலகில் ஆணும் பெண்ணும் காதல் கொள்வது இயற்கை. அதுவே உயர்ந்த நிலை அடைந்தால் பக்தி ஆகின்றது. உயிர் கடவுள் பால் கொள்ளும் காதல் பக்தி என்பதாகும். உலக இன்பத்தை எடுத்துக்காட்டாகக் கூறி பரம ஆனந்தத்தைத் தோற்றுவிப்பதே கவிகளின் உள்ளக் கிடக்கையாகும். அகப்பொருள் துறையில் ஆழ்வார்கள் பல பாசுரங்களைப் பாடியுள்ளனர். அவற்றுள் சிலவற்றைக் காண்போம்.

**கொச்சகக் கலிப்பா**

2785. வாயும் திரையுகளும் கானல் மடநாராய்
ஆயும் அமருலகும் துஞ்சிலும்நீ துஞ்சாயால்
நோயும் பயலமையும் மீதூர எம்மேபோல்
நீயும் திருமாலால் நெஞ்சம்கோட் பட்டாயே?

1. மேன்மேலும் கிட்டுகின்ற அலைகள் தாவும் இடமான கடற்கரைச் சோலையிலுள்ள இளமை தங்கிய நாரையே! நமது தாயும் தேவலோகமும் உறங்கினாலும் நீ உறங்குகிறாய் இல்லை. ஆதலால் மன வருத்தமும், அதன் காரியமான பசலை நிறமும் மேலிட்டு வர எங்களைப் போல நீயும் திருமகள் கொழுநனான எம்பெருமானால் நெஞ்சு பறித்துக் கொள்ளப்பட்டாயோ?

பிரிந்தவர்கள் இரங்குவது நெய்தல் நிலத்தில் ஆதலால் ஆழ்வார் இப்போது கடற்கரைச் சோலையில் இருப்பதாகக் கொள்க. ஆங்கு உணவுக்காக ஊக்கங் கொண்டிருக்கிற ஒரு நாரை கண்ணுக்குப் புலப்பட, அதனுடம்பில் இயற்கை யாக உள்ள வெண்மையைக் கண்டு அதுவும் தம்மைப் போலவே பிரிவாற்றாமையினால் துன்பப்படுவதாகக் கொண்டு நாராய்! ஐயோ நீயும் நான் அகப்பட்ட விஷயத் தில் அகப்பட்டு இப்படி ஆனாயோ? என்று சொல்வதாக அமைந்துள்ளது இப்பாசுரம். (இடம் போதாமையால் மேற் கொண்டு பாசுரங்களை எழுதாமல் பொருளை மட்டும் எழுது கின்றோம்.)

2. அபகரிக்கப்பட்ட நெஞ்சையுடையையாகி அதனால் தழுதழுத்த குரலையுடைய அன்றில் பறவையே! நெடிதான யாமங்கள் தோறும் படுக்கையிற் சேராமல் வருந்து கின்றாய். ஆதலால் அடிமைப்பட்ட எங்களைப் போலவே பிரிவாற்றாமை தோற்ற இருக்கிற நீயும் அரவணையா னாகிய எம்பெருமானது திருவடி சம்பந்தம் பெற்ற திருத் துழாய் மாலையை ஆசைப்பட்டாயோ?

ஆணும் பெண்ணுமான அன்றிற் பறவை இணை பிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்றுவாய் அலகைக் கோத்துக்கொண்டு உறங்கும்போது அவ்வுறக்கத்தில் வாயலகு தன்னில் நெகிழ்ந்த அளவில் துயில் உணர்ந்து அப்பிரிவைப் பொறாமல் மெலிந்து பெருந் தொனியாகக் கத்துகிற மிக இரங்கத்தக்க சிறு குரல் ஆழ்வாரது திருச்செவியில் விழுந்ததாக அதுவும் பகவத் விஷயத்தில் ஈடுபட்டு பிரிவாற்றாமையினால் கத்துகின்றதெனக் கொண்டு, ஐயோ! நீயும் என்னைப் போல் ஆழியான் என்னும் ஆழ மோழையில் அகப்பட்டாயோ என்கிறார்.

3. ஓ! முழங்குகின்ற கடலே! விரும்பின பொருள் பெறாத துன்பத்தால் நீ இரவும் பகலுமாகிய எப்பொழுதும் கண்ணுறங்காதாகி உள்ளிடமும் நீராகி ஏங்குகின்றாய். ஆதலால் தென் இலங்காபுரி முழுவதும் நெருப்புக்கு உணவாக்கின பெருமானுடைய திருவடிகளை ஆசைப்பட்ட நாங்கள் அடைந்த வருத்தத்தை நீயும் அடைந்தாயோ? நீயும் மனத்துன்பம் தீர்ந்து வாழ்க.

நீயும் இராமபிரானது திருக் குணங்களில் அகப்பட்டு நான் படும்பாடு பட்டாயோ என்பதாய் இப்பாசுரம் அமைந்துள்ளது.

4. குளிர்ந்த வாடைக் காற்றே! கடலையும் மலையையும் ஆகாயத்தையும் தடவிக் கொண்டு எம்மைப்போல் சந்திர சூரியர்களாகிய இரு சுடர்களையும் தம்மிடத்து முறையே கொண்ட இரவிலும் பகலிலும் நீ கண்ணுறங்குகின்றிலை; ஆதலால் வலிமை கொண்ட திரு ஆழிப் படையையுடைய எம்பெருமானைக் காணுதற் பொருட்டு நீ நெடுநாளாக உடம்பு நோவு கொண்டாயோ?

காற்றானது எங்கும் பரவிய தத்துவம்; அது ஒரு நொடிப் பொழுதும் ஓரிடத்தில் நிலை நின்றிராது. உடம்பில் புழுதியை ஏறிட்டுக் கொண்டு வடிவு தெரியாதபடி இருக்கும்

குளிர்ச்சியுடையதாயும் இருக்கும். ஆக இத்தனையும் அதற்கு இயல்பாய் இருக்க அதனை அறியாமல் அதுவும் தம்மைப் போல் பகவத் விஷயத்தில் ஆசை வைத்து விருப்பம் நிறைவேறாமல் துன்பப்படுவதாக ஆழ்வார் கூறுகின்றார்.

5. உலகமெல்லாம் பெருகும்படி நீரை முகந்துகொண்டு காலம் உள்ளளவும் நீர் வடிவாய் விழுகின்ற மேகமே! நீயும், எமது தோழிமார்களும் நாங்களும்போல் எம்பெருமானது பெருமிடுக்கில் அகப்பட்டு அவனது ஆசையினால் அழுகின்றாயோ? இத் துன்பம் தீர்ந்து வாழ்க.

மேகம் நீர் சொரிவதைக் கண்ணீர் விட்டு அழுகிறபடியாக எண்ணி ஆழ்வார் சொல்லுகிறார்.

6. பிறைச் சந்திரனே! நைந்து போவதையே இயற்கையாகவுடைய எங்களைப் போல ஒளி உருவாகிய நீயும் இக்காலத்தில் கரிய வானத்திலுள்ள இருளை நீக்காமல் மயங்கிக் குறைபடுகின்றாய். ஆதலால் ஐந்து முகங்களையுடைய ஆதிசேஷனாகிற சயனத்தின் மீது உள்ள சக்ர பாணியான எம்பெருமானது உண்மையான சொல்லைக் கேட்டு உனது வடிவின் குணமாகிய ஒளியை இழந்தாய் போலும்?

இளம் பிறைச் சந்திரனைக் கண்டு அந்தோ உன் வடிவில் எழில் எல்லாம் இழந்தாயோ? நீயும் எம்பெருமானுடைய பொய்யுரையில் நம்பிக்கை கொண்டு நான் பட்ட பாடு படுகின்றாய் போலும் என்கிறார். நாள் மதியே என்பதற்கு பூரணனாய் இருந்த சந்திரனே என்ற பொருளும் பொருந்தும்.

7. கனத்திருக்கிற இருளே! நமக்குச் சுவாமியான நாராயணனுக்கு விதேயமான நெஞ்சைப் பறிகொடுத்தோமாகி எங்கள் ஆற்றாமையை வாய்விட்டுச் சொல்லி அழுகின்ற எங்களை நீ நடுவில் நுழைந்து பகைவர்கள் நலிகிற

வகையைக் காட்டிலும் கொடுமையாகக் காலம் உள்ளளவும் பகைத் தன்மையை ஆளுகையில் நிற்கிறாயோ? இந் நிலைமை நீங்கி வாழ்வாயாக.

8. இருண்ட பெரிய நீர்க்கழியே! மிகவும் மருட்சி யடைந்து இரவும் பகலும் முடித்தாலும் நீ ஓய்கின்றாய் இல்லை. உருளுகின்ற சகடத்தைத் திருவடிகளால் உதைத் தொழித்த எம்பெருமானுடைய அருள் குணத்தில் உண்டான பேராசையினால் ஆழ்ந்து நோவு பட்டாயோ?

இருளின் செறிவால் நீருக்கும் தரைக்கும் வாசியறி யாமல் ஒரு கழியில் சென்று இறங்கினாள். கழி இரைந்து கொண்டு ஓடுகின்றமையால் அது தன்னைப் போலவே பகவத் விஷயத்தில் ஈடுபட்டு உறக்கமில்லாமல் கதறுகின்ற தாகக் கொண்டு சகடாசுர பங்கம் பண்ணின பெருமா னுடைய செயலிலும் நீயும் அகப்பட்டாயோ என்கிறார்.

9. அழிவில்லாத விளக்கே! இரங்கத் தகுதியுடைய நீயும் நோவு பட்டு மாளாத ஆசை மெல்லிய பிராணனை யும் உள்ளே உலர்த்த, சிவந்த தாமரை மலர் போன்ற பெரிய கண்களையும் சிவந்த கொவ்வைக் கனிபோன்ற வாயையும் உடைய எம்பெருமானது அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையின் மீதுள்ள விருப்பத்தினால் வேகின்றாயோ?

ஆற்றாமையினால் தன் மாளிகையில் புகுந்து அங்கு எரிகிற விளக்கைப் பார்த்து, நீயும் எண்ணைப் போல் பகவத் விரகத்தால் வெதும்புகின்றாயோ? உனக்கும் துழாய் மாலை மீது விருப்பம் உண்டாயிற்றோ? என்கிறார்.

10. குதிரை வடிவாக வந்த கேசி என்னும் அசுர னுடைய வாயைப் பிளந்தவனும், இரட்டை மருத மரங் களின் நடுவே தவழ்ந்து சென்று அவற்றை முறித்துத் தள்ளினவனும், திரிவிக்ரமனாய்ப் பூமியை அளந்து கொண்டவனுமான அழியாத முதல்வனே! எவ்வளவு

வேகச் செய்து திருப்தியடையாத ஆசை நோய் மெல்லிய ஆத்மாவைக் குறித்து வற்றாக வற்றுவிக்க இரவும் பகலும் இடைவிடாமல் உன்னிடத்தில் ஈடுபடுத்திக் கைவிட்டு விட்டாய். போனது போகட்டும். இனிமேல் எம்மைக் கைவிட வேண்டா.

என்னை இதுவரை வருத்தினது போதும். நீ இனி ஒரு காலமும் என்னைக் கைவிடாமல் கொள்ள வேணும் என்று பிரார்த்திக்கிறது இப்பாசுரம்.

2795. சோராத எப்பொருட்கும் ஆதியாம் சோதிக்கே
ஆராத காதல் குருகூர்ச் சடகோபன்
ஓராயிரம் சொன்ன அவற்றுள் இவைபத்தும்
சோரார் விடார்கண்டீர் வைகுந்தம்
திண்ணெனவே.

11. ஒன்றும் குறையாத எல்லாப் பொருள்களுக்கும் காரணபூதனாகப் பெற்ற ஒளி உருவினனான எம்பெருமானுக்கு அடங்காத ஆசையை உடையவரான ஆழ்வார் ஓராயிரமாக அருளிச் செய்த பாசுரங்களுக்குள்ளே இந்தப் பாசுரங்களையும் மறவாதவர்கள் பரம பதத்தைத் திடமாக விடாமல் நித்திய அநுபவம் பண்ணப் பெறுவார்கள்.

**சிறப்புக்கள்**

சைவத்திற்கு மாணிக்கவாசகர் போன்று, வைணவத்திற்கு நம்மாழ்வார் ஆவார். நம்மாழ்வார் ஒரு நாட்டிற்கோ, ஒரு சமயத்திற்கோ மட்டும் உரியவர் அல்லர். அவர் எல்லா நாட்டிற்கும் எல்லாச் சமயத்தார்க்கும் எல்லா இனத்தார்க்கும் உரியவர். எல்லோரும் 'நம்மாழ்வார்' என்று போற்றும் ஒரு பெரியாரை அளித்த தமிழ்நாட்டை மனத்தால் நினைக்கிறேன். வாயால் வழுத்துகிறேன்; கையால் தொழுகிறேன்; என்கிறார் திரு. வி. கலியாண சுந்தரனார். நம்மாழ்வார், தம்மையும் பிறவற்றையும் இறை இயல்பாகக் காணும் மனப்பாங்கினர்.

2657. பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவி மலரென்றும் காண்தொறும்—பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை
எல்லாம் பிரான் உருவே.

என்று நம்மாழ்வார் உளங்கசிந்து உரைக்கிறார். ஒன்றிய திங்களைப் பார்த்து, 'ஒளி மணி வண்ணனே' என்றும், நின்ற குன்றத்தினை, 'நெடுமால்' என்றும் நன்று பெய் மழையை, 'நாரணன் வருகை' என்றும் பக்தி மையல் கொண்டு பாடும் இயல்பினர். இவ்வாறு இவர் இயற்கையைப் பார்த்து, இறைவனை நினைந்து, தம் உளங்கசிந்து வழுத்தும் திருவாக்குகள் படிப்பவர் உள்ளத்தைக் குழையச் செய்வனவாகும். இவருடைய பாடல்களின் சிறப்பைக் கண்ணுற்ற பெரியவாச்சான் பிள்ளை போன்ற உரையாசிரியர்கள் சிறந்த வியாக்கியானங்கள் எழுதியுள்ளனர். அது பற்றி தனியே எழுதப்பட்டுள்ளது.

இவரைத் திருமாலின் அவதாரம் என்று கூறுவாரும் உளர். 'திருவாய் மொழி' என்னும் நூல் மூலமாகச் சாம வேதத்தை உலகோர் அறியும்படி பாசுரங்களாகப் பாடியுள்ளார். திருவாய் மொழிப் பாசுரங்கள் அந்தாதியாக அமைந்துள்ளன. இதனால் ஓதுவார்க்கு இடையறவின்றி நினைவிற்கொண்டு ஓதற்கு உதவிபுரிகிறது. இதனால் எல்லாரும் இவரை 'வேதம் தமிழ் செய்த மாறன்' என்று போற்றுவாராயினர். 'நம்மாழ்வார்' என்று உரிமையோடு அழைக்கலாயினர்.

ஆழ்வார்கள் பன்னிருவருள் நம்மாழ்வாரே தலைசிறந்தவர். இவரை அவயவியாகவும் மற்றைய ஆழ்வார்களை அவயவமாகவும் கருதிப் போற்றுகிறார்கள் வைணவர்கள். உயிரினங்கள் சிறிதும் துயரமின்றி வாழ ஒரேவழி இறைவனைத் தொழுவதே யாகும் என்பது இவர் துணிவு.

பக்திநெறி உலகெலாம் தழைக்க வேண்டும் என்று சீரிய வாழ்வை மேற்கொண்ட நம்மாழ்வார் தோன்றிய

ஊரான திருநகரியைக் காண்பதே பெரும்பேறு என்றும் அதுவே பரமபத இன்பம் என்றும் கூறி மகிழ்கிறார் இராமாநுசர்.

இதுவோ திருநகரி ஈதோ பொருநை
இதுவோ பரமபதத்து எல்லை—இதுவோதான்
வேதம் பகர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன் ஊர்.

நம்மாழ்வாரின் ஊராகிய திருநகரியைக் காணும்போதே இராமாநுசருக்கு இத்தகைய இன்பம் ஏற்பட்டதென்றால் நம்மாழ்வாரையே நேரில் காணும் பேறு அவருக்குக் கிடைத்திருந்தால் எத்தகைய இன்பம் அனுபவித்திருப்பார் என்பதை நினைந்து மகிழ்க.

இவர் இயற்றிய திருவாய் மொழியே 'திராவிட வேதம்' என்று புகழப்படுகிறது.

தலைவி சிறு பூவை (நாகணை வாய்ப்புள்) ஒன்றை வளர்க்கிறாள். அவள் காதல் நோயை அப்பறவை, திருமாலிடம் சென்று உணர்த்தவில்லை. இதனால் அவள் மெலிந்து வாடி வண்ணம் வேறு பட்டாள். இனிமேல் அப்பூவைக்கு இன்னடிசில் ஊட்டும் சிறிய சத்தியினையும் இழந்துவிட்டாளாம். ஆகவே, அப்பூவையினைப் புதுச் சோறு கிடைக்குமிடம் நாடிச் செல்லச் சொல்கிறாள். சொற்கள் பாடலின் சிறப்பான அழகினைப் புலப்படுத்துகின்றன.

**கொச்சகக் கலிப்பா**

2715. நீ அலையே சிறுபூவாய் நெடுமாலர்க்கு என்தூதாய்
நோய் எனது நுவலென்ன நுவலாதே
இருந்தொழிந்தாய்
சாயலொடு மணிமாமை தளர்ந்தேன்நான்
இனிவுனது
வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே.

'செங்கணும் கரியகோல மேனியுங்கொண்டு பொலியும் திருமாலை, வாடா மாலையாம் பாமாலை புனைந்து ஏத்தி வணங்கின் அரிய செயலாக அவனியிற் கொள்வதற்கு ஒன்றுமில்லை' என்பது இவர் கொண்ட உள்ள உறுதி.

**கலிநிலைத்துறை**

3056. கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்
பெரிய கோலத் தடங்கண் விண்ணோர் பெருமான் தன்னை
உரிய சொல்லால் இசைமாலைகள் ஏத்தி உள்ளப் பெற்றேற்கு
அரியதுண்டோ எனக்கு இன்றுதொட்டும் இனி யென்றுமே.

இத்திருவாய் மொழிக்கு ஆறாயிரப்படி, ஒன்பதாயிரப் படி, பன்னீராயிரப்படி, இருபத்திநாலாயிரப்படி, முப்பத் தாறாயிரப்படி என்னும் வியாக்கியானங்கள் ஓதப்படு கின்றன. அதன் விரிவைப் பின்வரும் அதிகாரங்களில் காணலாம்.

# திருவாய்மொழி

## முன்னுரை

நம்மழ்வார் மிக்க இளம் பருவத்திலேயே இறைவ னிடத்து பேரன்பு கொண்டவராயினர். அங்ஙனம் அன்பு கொள்ளுமாறு இறைவனே அருள் புரிந்ததாக அவர் கூறு கின்றார். ஓதாது உணர்ந்த ஞானச் சிறப்புடைய ஆழ்வார் இறைவனைப் பற்றி பாடி கவிகள் திருவிருத்தம், திரு வாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி என்னும் நான்கு பிரபந்தங்களாய் வழங்குகின்றன. அவற்றுள் திருவாய் மொழியினைக் குறித்து சில செய்திகளை இவண் காண்போம்.

## திருவாய் மொழியின் சிறப்பு

நம்மாழ்வாருடைய நூல்களுள் எல்லாம் திருவாய்மொழி மிகச் சிறப்பாகப் பாராட்டப்படுகின்றது. நம்மாழ்வாரையும் அவருடைய திருவாய் மொழியையும் பாராட்டித் தமிழிலும் வடமொழியிலும் பல நூல்கள் தோன்றியுள்ளன.

1. சடகோபர் அவதரிப்பதற்கு முன் திருக்கோளூர் என்னும் திருப்பதியில் அந்தணர் குலத்தில் தோன்றியவர் மதுரகவிகள் என்னும் பெரியார். அவர் நான்மறை, ஆறங் கம் முதலியனவும் வடமொழியிலும் தென்மொழியிலும் நன்கு

கற்றவர். அவர் நம்மாழ்வாருக்குச் சீடராகி அவரையும் அவரது நூல்களையும் சிறப்பித்து 'கண்ணி நுண் சிறுத் தாம்பு' என்னும் பத்துப் பாசுரங்களை அருளிச் செய் துள்ளார்.

2. கம்பர் நம்மாழ்வாரைப் பற்றிச் 'சடகோபரந்தாதி' என்ற ஓர் அரிய நூலை இயற்றியுள்ளார். அந்நூல் நூறு பாக் களை உடையது. அவர் திருவாய் மொழியை, 'ஆராவமுதக் கவியாயிரம்' என்று பாராட்டியுள்ளார். திருவாய்மொழியின் முன் பிறகவிகள் 'பொருளற்கவிகளே' என்கிறார் அவர்.

3. திருவாய்மொழி நூற்றந்தாதி. இந்நூல் திருவாய் மொழியின் ஒவ்வொரு பதிகத்தின் கருத்தையும் தொகுத்து ஒவ்வொரு வெண்பாவில் அடக்கிக் கூறுகின்றது. மற்றும் மாறன் அலங்காரம், மாறன் பாப்பாவினம், மாறன் திருப்பதி கோவை, மாறனகப் பொருள், மாறன் கோவை என்ற நூல்கள் நம்மாழ்வாரையும் அவர் நூல்களையும் சிறப்பித்து எழுந்தனவாம்.

### செய்யுள் பாடிய முறை

நம்மாழ்வாருக்கு அறியாக் காலந்தொட்டு இறைவனி டத்துண்டாகிய அன்பு நாளுக்கு நாள் பெருகுவதாயிற்று. இறைவனை நினைத்தலும், வணங்குதலும் அவருக்கு இயல் பாய்விட்டன. ஆழ்வாருக்கு எம்பெருமானை நினைக்க நினைக்க அவர் உள்ளத்தெழுந்த இன்பவெள்ளம் உடல் தொடர்பு இல்லாதது. ஐம்பொறி இன்பமன்று; உயிரை ஒட்டிய இன்பமாகும். ஆழ்வார் எம்பெருமானை ஊனக் கண்ணாற் கண்டிலர். ஞானக் கண்ணாற் கண்டு இன்புற் றனர். நினைந்து நினைந்து இன்புற்றனர். 'யான் உய்வான் ஏத்தினேன்' 'உள்ளுந்தோறும் தித்திப்பான்' 'என் ஆரா அமுதமே' போன்ற தொடர்களால் இவை புலனாகும்.

ஆழ்வார் எம்பெருமானை ஞானக் கண்ணாற் கண்டு களித்தார். அக்களிப்பினால் சொல் மாலைகள் தொடுத்தார்.

அவர் பாடிய ஒவ்வொரு பாசுரமும் அவர் இறைவனுக்கு அணிவித்த மாலையாகும். ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு மலர். ஒவ்வொரு பாசுரமும் ஒரு மாலை, சொல் மலர்; பொருள் நறுமணமும் நறுந்தேனுமாகும்.

**பயன்**

ஞானக் கண்ணால் எம்பெருமானைக் கண்டு ஆழ்வார் அருளிய சொன் மாலைகள் அடியார்களுக்கு செவி அமுத மாக விளங்குகின்றன. ஆதலால்தான் கம்பரும் திருவாய் மொழியை 'ஆராவமுதக் கவியாயிரம்' என்றார்.

**ஆழ்வார் வேண்டுகோள்**

ஆழ்வார் பயன் கருதித் திருமாலிடத்து அன்புகொண் டிலர்; இயல்பாகவே அன்பு கொண்டனர். பிறவித் துன்பத்தி னின்றும் நீங்கிப் பரமபதம் அடைதல் ஆழ்வார் விரும்பும் பயனே எனினும் அது முக்கிய பயனன்று. இறைவனிடத்து நீங்கா அன்பும், அவனை வணங்குவதும், அவன் புகழ் களைப் பாடி மகிழ்வதுமே ஆழ்வார் விரும்பும் பயன்களாம். இக்கருத்துடைய பல பாசுரங்கள் திருவாய்மொழியில் காணப்படுகின்றன.

இறைவனுக்கு இடைவிடாமல் தொண்டு புரிதலையே அவர் வேண்டினார் என்பது 'ஒழிவில் காலமெல்லாம்' என்ற பாசுரத்தால் அறியப்படும். எம்பெருமான் அல்லாத பிறரால் கிடைக்கும் பயன்களை அவர் விரும்பவில்லை என்பது 'உன்னால் அல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண் டேன்' என்ற தொடரால் விளங்கும்.

**பாடல் விளக்க வுரைகள்**

திருவாய் மொழி சாம வேத சாரமென்றும் 1102 பாடல் களைக் கொண்டது என்றும் முன்பு கூறினோம். இது முதல் பத்து, இரண்டாம் பத்து என்று பத்து பகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு பத்திலும் சற்றேறக்குறைய 110

பாடல்கள் வீதம் இருக்கும். ஒவ்வொரு பாசுரத்திலும் 10 அல்லது 11 பாடல்கள் வீதம் இருக்கும். ஒவ்வொரு பாசுரத்திற்கும் 1 பாடல் விதம் 100 பாசுரங்களுக்கும் ஸ்ரீமணவாள மாமுனிகள் 100 வெண்பாக்கள் பாடியுள்ளார். அந் நூலுக்குத் திருவாய்மொழி நூற்றந்தாதி என்று பெயர்.

1. உயர்வே பரன்படியை யுள்ளதெல்லாந் தான்கண்டு
உயர்வேத நேர்கொண் டுரைத்து — மயர்வேதும்
வாராமல் மானிடரை வாழ்விக்கும் மாறன் சொல்
வேராக வேவிளையும் வீடு.

ஃ ஃ ஃ

100. முனிமாறன் முன்புரைசெய் முற்றின்பம் நீங்கித்
தனியாகி நின்று தளர்ந்து — நனியாம்
பரமபத்தி யால்நைந்து பங்கயத்தாள் கோனை
ஒருமையுற்றுச் சேர்ந்தான் உயர்ந்து.

வாசகர்களின் நலங்கருதி ஒவ்வொரு பத்துக்கும் ஒரு பாடலும் அப்பாடலுக்கு விளக்கவுரையும் கீழே தரப் பட்டுள்ளன. வாசகர்கள் முழு நூலையும் கற்றுப் பயனடைவார்களாக.

முதல் பத்து

(கலி விருத்தம்)

2675 உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற் மதிநலம் அருளினன் யவனவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனனே.

எனது மனமே! தன்னைப் பார்க்கிலும் உயர்வு இல்லாத படி உயர்ந்த ஆனந்தம் முதலிய கல்யாண குணங்களைச் சுயமாக உடைத்தானவன் யாவன் ஒருவனோ, அஞ்ஞானம் ரசிக்கும்படி ஞானத்தையும் பக்தியையும் அடியேனுக்குக்

கிருபை பண்ணிவன் யாவன் ஒருவனோ, மறப்பு இல்லாத தேவர்களுக்குத் தலைவன் யாவன் ஒருவனோ, அந்த எம் பெருமானுடைய சோதி மயமாய் விளங்குகின்ற திருவடிகளை வணங்கி நீ கடைத்தேறக் கடவை.

இறைவன் திவ்விய குணமும் உருவமும் உடையவன். நித்தியர்களோடு அழியா உலகில் வாழ்பவன். நமக்கு விரோதி அஞ்ஞானம். இறைவனது அருளே நமக்கு உபாயம்; இறைவனது மிக உயர்ந்த குணங்களில் ஈடுபட்டு, அதனால் அவனுக்குத் தொண்டு செய்தலே வாழ்க்கையின் பயனாம்.

**பாடல்களின் விளக்கம்**

11 பாடல்கள் கொண்டது 1 பாசுரம்
10 பாசுரங்கள் கொண்டது 1 பத்து $(11 \times 10 = 110)$
10 பத்துக்கொண்டது 1 திருவாய்மொழி

$$11 \times 10 \times 10 = 1100$$
$$+2$$
$$1102$$

குறிப்பு: ஒரு பத்து என்பது 110 பாடல்களைக் கொண்டது.

**இரண்டாம் பத்து**
(கலிவிருத்தம்)

2810. எனதாவி யுள்கலந்த பெருநல்லுதவிக் கைம்மாறு
எனதாவி தந்தொழிந்தேன் இனிமீள்வ தென்பதுண்டோ?
எனதாவி ஆவியும்நீ பொழில்ஏழும் உண்ட எந்தாய்
எனதாவி யார்? யான்ஆர்? தந்தநீகொண் டாக்கினையே.

என்னுடைய ஆன்மாவோடு கலந்த மிக்க நல்ல உதவிக்குப் பதிலாக எனது ஆன்மாவை உன்னுடைய திருவடிகளில் கொடுத்து விட்டேன். இனி அதைத் திரும்பப் பெறுவது என்பது இல்லை. ஆனால் என்னுடைய ஆன்மாவோ? எனது ஆன்மாவுக்கும் ஆன்மா நீ அல்லவா? என் ஆன்மா உன் உடமையன்றோ? ஏழு உலகங்களையும் பிரளயத்தில் நினது வயிற்றில் வைத்துக் காக்கும் தந்தையே! யான் உள்பட அனைத்தும் நின் உடமை யன்றோ? நான் கொடுத்ததாக நினைத்த எனது ஆன்மா யார்? கொடுத்தேன் என்று சொல்லும் நான் யார்? எனக்கு ஓர் இருப்பைத் தந்த நீயே கொண்டவனானாய். உன் இச்சைப்படியே எடுத்துக் கொண்டாய்.

ஆன்மா இறைவனது உடைமை. அதை நம்மதென்று பல பிறவிகளாக நினைத்திருக்கும் நாம் அதை அவனுடைய தென்று அறிந்து அவனிடமே ஒப்புவித்துவிட வேண்டும். அவனது உடைமையை அவ்வாறு அவனிடம் கொடுக்கும் போதும் அதுவரை அபகரித்து வைத்திருந்ததற்காக வெட்கப்பட வேண்டும். கொடுத்த பின்பும் 'கொடுத்தோம்' என்ற நினைவையும் விட்டு, கொடுத்தவன் கொண்டான் என்று இருத்தல் வேண்டும்.

மூன்றாம் பத்து

(கலி விருத்தம்)

2919 ஒழிவில் கால மெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்
தெழிகுரல் அருவித் திருவேங் கடத்து
எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே.

முடிவில்லாத காலமெல்லாம் எக்காலத்தும் கூடத் தொடர்ந்து எங்கும் எந்நிலையிலும் பிரியாது நின்று, ஒன்றும் நழுவாதபடி எல்லாவித அடிமைத் தொழில்களையும் செய்ய வேண்டும்; யார்க்கு எனில் கம்பீரமான தொனியையுடைய

அருளியுள்ள திருவேங்கடமென்னும் திருப்பதி மலையில் வாழும் அழகுமிக்க சோதி வடிவான, நமக்கும் நம்முடைய குலத்தார்க்கும் நாதனான எம்பெருமானுக்கே. வழுவிலா அடிமை — தன்னயம் அற்ற, தனக்கென ஒன்றும் விரும்பா அடிமை என்றுமாம்.

**நான்காம் பத்து**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

3040 மண்ணை இருந்து துழாவி
வாமநன் மண்ணிது என்னும்
விண்ணைத் தொழுதவன் மேவு
வைகுந்தம் என்றுகை காட்டும்
கண்ணையுள் நீர்மல்க நின்று
கடல்வண்ணம் என்னும் அன்னேஎன்
பெண்ணைப் பெருமயல் செய்தாற்கு
என்செய்கேன் பெய்வளை யீரே.

பூமியை முழுவதையும் முன்பு இவள் இருப்புக் கொள்ளாமல் வருந்தினது போய் இப்போது இருந்து துழாவித் தடவிக் கொண்டு தெளிவாக எனக்குத் தெரிவது உங்களுக்குத் தெரியவில்லையோ? வாமனன் முன்பு இரந்து அளந்து பெற்ற பூமி இது என்று சொல்லுகிறாள்; ஆகாயத்தை நோக்கித் தொழுது அவன் பிரிவின்றிக் கலந்து நித்யமாக வாசம் பண்ணும் பரமபதமன்றோ என்றுசொல்லத் தொடங்கி, வருத்த மிகுதியால் அதைச் சொல்ல மாட்டாதே கையால் குறிப்பிட்டுக் காட்டும்.

அப்பரமபதம் உரிமையாய் இருந்தும் இழப்பதே என்று வருந்தி கண்ணைக் கண்ணீர் நிறைக்கநின்று தன்னைப் பித்தேறச் செய்த கடல் போன்ற நிறத்தை — தாபத்தைத் போக்கும் நிறத்தை உடையவன் என்று சொல்லுகிறாள். அம்மே! என் பெண்ணிற்கு, கலந்து பிரிந்தார்படும் வருத்தப்

நில்லாது, அதற்கு மேலும், அவனை நினைப்பூட்டும் பொருளைக் கண்டு வருந்தும் பெரும் பித்தை உண்டு பண்ணியவர்க்கு யான் என்ன செய்வேன்? அவனை வரப் பண்ணுவேனோ? இவளை ஆறி இருக்கப் பண்ணுவேனோ; நான் பொறுத்திருப்பேனோ? இடப்பட்ட வளையை உடைய மாதர்களே! இவளது வளை போலன்றிக் கழலாது நிற்கும் வளையோடிருக்கும் நீங்கள் உங்கள் கையில் வளையல் தங்குவதற்குச் செய்த வழியைச் சொல்லுங்கள், யானும் செய்து பார்க்கிறேன்.

ஐந்தாம் பத்து
(கொச்சகக் கலிப்பா)

3150 ஊரெல்லாம் துஞ்சி யுலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறியோர் நீள்இரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்டநம் பாம்பணையான் வாரானால்
ஆரெல்லா! வல்வினையேன் ஆவிகாப் பாரினியே?

பழிசொல்லுவாரும் நன்மையுரைப்பாரும் பேச்சுத் துணையாலாரும் எனக்கு இல்லாதபடி, ஊரில் உள்ளார் அனைவரும் உறங்கி, கண்ணிற் கண்ட ஒன்றைக் கொண்டாயினும் பொழுது போக்க ஒண்ணாதபடி மற்றைய உலகங்கள் எல்லாம் எல்லாப் பொருள்களும் மறையும்படிச் சூழும் இருள் செறிந்த நடுநிசியாகி, ஓர் ஒலியைக் கேட்டா யினும் தரிக்க ஒண்ணாதபடி நீர் யாவும் ஒலி அடங்கும்படி அலையடங்கித் தெளிந்து பகலில் கலப்பின்றிய ஒரு நீண்ட இரவாய் எல்லையின்றி வளர்ந்துவிட்டது.

உலகங்களையெல்லாம் உண்ட, நம் பாம்பைப் படுக்கை யாகக் கொண்ட இறைவன் — நாயகன் — வரவில்லையே, வந்து முகங் காட்டவுமில்லையே, இது என்ன ஆச்சரியம்! பெரும் பாலத்தையுடையேனாகிய எனது உயிரைக் காப்பார் பின்பு யார்?

இரவு, உலகத்தார் அறிய ஒண்ணாதபடி இறைவனை அனுபவித்தற்கு உரிய காலமாகும். அக்காலம் வந்தும்,

இறைவன் வாராமையாலே விளைந்த துயர மிகுதியால் முயற்சியொன்றும் செய்ய முடியாமல், உயிரையும் விட முடியாமல் ஆழ்வார் தத்தளிக்கிறார்.

## ஆறாம் பத்து

*(கலி நிலைத்துறை)*

3293 உண்ணுஞ் சோறு பருகுநீர்
தின்னும்வெற் றிலையுமெல்லாம்
கண்ணன், எம்பெருமான், என்றென்
றேகண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன்சீர் வளம்மிக்(கு)
அவனூர் வினவி
திண்ணம் என்னிள மான்புகும்
ஊர்திருக் கோளூரே.

உண்ணக் கூடிய சோறும், குடிக்கும் நீரும், தின்னும் வெற்றிலையும், இப்படி எல்லாப் பொருள்களும் — தாரக போஷண போக்கியப் பொருள்கள் யாவும்—கிருஷ்ணனாய், எனக்கு நாதனான அவனே என்று பலமுறை கூறி, அவனைக் கிட்டப் பெறாமையாலே இடைவிடாமல் கண்ணீர் நிரம்பி, இப்பூமியில் அவனுடைய பல்வகைக் குணங்களையும் அன்பின் வளம் மிக்கவனுடைய ஊரையும் தான் சொல்லுவதுமன்றிப் பிரேமையின் வசப்பட்டு, தான் அறியாதது போலப் பிறரை வினவி, மென்மையான இயல்புடைய என் மகள் புகும் ஊர், திருக்கோளூரேயாகும். இது உறுதி.

மகள், தாயார் முதலான பந்துக்களையும் போகத்திற் குரிய கருவிகளையும் விட்டுப் போனது, ஆழ்வார் உலக மக்களையும் உலக இன்பங்களையும் துறந்து, தெவிட்டாத இன்ப வெள்ளத்தில் மூழ்கத் துணிந்ததைக் குறிக்கும்.

## ஏழாம் பத்து

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

3348 கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்
கண்ணநீர் கைகளால் இறைக்கும்
சங்குசக் கரங்கள் என்றுகை கூப்பும்
தாமரைக்கண் என்றே தளரும்
எங்ஙனே தரிக்கேன் உன்னைவிட் டென்னும்
இருநிலம் கைதுழா விருக்கும்
செங்கயல் பாய்நீர்த் திருவரங்கத்தாய்
இருள்திறத் தென்செய்கின் றாயே?

உலகத்தார் உறங்கும் இரவிலும் காதலிகள் உறங்கும் பகலிலும் தூக்கத்தை விரோதியெனத் தான் நீக்காது அதுவே ஒழிதலின் அறியாதவளாயினாள். இக்காரணத்தால் துயரத்தை உறக்கத்தால் ஒழிக்கமாட்டாதவளாயினாள். இதனால் வெள்ளமெனப் பெருகும் கண்ணீரை அவன் வரும் போது காணுதற்கு இடையூறாகக் கூடாது என்னும் கருத்தால் கடலைக் கையால் இறைப்பாரைப் போல் கைகளால் இறைக்கின்றாள். இக்கண்ணீர்க்கு இரங்கி அவன் வருவான் என்று நினைத்து, சங்கும் சக்கரமும் ஏந்தி வாராய் என்று சொல்லக் கருதி அதை முடியச் சொல்லமாட்டாமையால் சங்கு சக்கரங்கள் என்று மட்டும் சொல்லி மிச்சத்தைக் கை கூப்புவதனால் கருத்தை முடிக்கும்.

தாமரை போன்ற கண்களே என்று சொல்லி மனம் தளர் கின்றாள்; கண்டாரைப் பிச்சேற்றும் அழகுடைய உன்னைப் பிரிந்து எவ்வாறு தரிக்கக் கூடும் என்று சொல்கிறாள். பெரிய பூமியையும் கையால் தடவி சும்மா இருக்கிறாள். சிவந்த கயல் மீன்கள் பாய்கின்ற நீரையுடைய திருவரங்கத்தில் உள்ளவனே, இவள் விஷயத்தில் என்ன செய்யப் போகின் றாய்?

**எட்டாம் பத்து**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

3500 பிறந்தமாயா பாரதம்
பொருத மாயா நீயின்னே
சிறந்த கால்தீ நீர்வான்மண்
பிறவு மாய பெருமானே
கறந்த பாலுள் நெய்யேபோல்
இவற்றள் எங்கும் கண்டுகொள்
இறந்து நின்ற பெருமாயா
உன்னை எங்கே காண்கேனே?

கர்ம வசப்படாமலே அவதரித்த ஆச்சரியமானவனே! பாரதப்போர் நடத்திய ஆச்சரியமானவனே! நீ இவ்வாறு எளியனாய் படைப்புக்குக் காரணமான சிறப்புடைய வாயு, தீ, நீர், ஆகாயம், பூமி என்னும் ஐந்து பூதங்களுக்கும் அவைகளின் காரியமான மற்ற தேவன் மனிதன் முதலிய எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மாவான ஈசனே! கண்ணாலே காண்கின்ற கறந்த பாலுக்குள் காண அரிதான படி நின்ற அதி ஆச்சரியமானவனே! உன்னை எவ்விதத்தில் காணக் கடவேன்?

**ஒன்பதாம் பத்து**

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

3646 புகலிடம் அறிகிலம் தமியம் ஆலோ
புலம்புறும் மணிதென்றல் ஆம்பல் ஆலோ
பகலடு மாலைவண் சாந்தம் ஆலோ
பஞ்சமம் முல்லைதண் வாடை யாலோ
அகலிடம் படைத்திடந்து உண்டு உமிழ்ந்து
அளந்தெங்கும் அளிக்கின்ற ஆயன் மாயோன்
இகலிடத்து அசுரர்கள் கூற்றம் வாரான்
இனியிருந்து என்னுயிர் காக்கு மாறென்?

ஆலோ — ஆல், ஓ அசைகள்.

தனிமையாயிருக்கும் நாம் ஒதுங்கும் இடம் அறியோம். புலம்பும் மணியும் தென்றலும் குழலும் பகலையும் கொன்று வரும் மாலைப் பொழுதும், அழகிய சந்தனமும், பஞ்சமம் என்னும் பண்ணும், முல்லையாழும், குளிர்ந்த வாடையும் ஒன்றாகத் திரண்டு வந்து என்னைக் கொல்லும். இதே சமயத்தில் பரந்த பூமியை உண்டாக்கியும், பிரளய வெள்ளத் திலிருந்து மூழ்கி எடுத்தும், உண்டு வயிற்றிலே வைத்துக் காத்தும், உமிழ்ந்தும் அளந்தும் எல்லா விதத்தாலும் வரையாது காக்கும் ஆயனும், ஆச்சரியமான செயல்களை யுடையவனும், போர்க்களத்தில் எதிர்க்கும் அசுரர்களுக்கு யமன் போன்றவனும் ஆன கண்ணன் வாராதிருக்கின்றான். இனி வாழ்ந்திருந்து என் உயிரை நான் காப்பது எப்படியோ?

## பத்தாம் பத்து

(வஞ்சித் துறை)

3711 கண்ணன் கழலிணை
நண்ணும் மனமுடையீர்
எண்ணும் திருநாமம்
திண்ணம் நாரணமே.

(இவ்வுலகில் நம்கண் காணவந்து தோன்றிய) கிருஷ்ண பிரானுடைய திருவடிகளை அடையும் இச்சையுடைய வர்களே, சிந்தித்தற்கு உரிய திருநாமம் நிச்சயமாகவே 'நாராயணன்' என்பதே.

## பன்னிரண்டு நாமங்கள்

திருவாய்மொழி இரண்டாம் பத்து ஏழாம் பதிகத்தில் திருமாலின் பன்னிரு நாமங்களையும் அமைத்துப் பாடு கின்றார் ஆழ்வார். வைணவர்கள் தம் திருமேனியில் துவாதச நாமங்களைச் சாத்துவதற்கும் இதற்கும் பொருத்தம் உண்டு. பன்னிரு நாமங்களாவன :

1. கேசவன்
2. நாராயணன்
3. மாதவன்
4. கோவிந்தன்
5. விஷ்ணு
6. மதுசூதனன்
7. திருவிக்கிரமன்
8. வாமனன்
9. ஸ்ரீதரன்
10. ரிஷிகேசன்
11. பத்மநாபன்
12. தாமோதரன்

இப்பாடல்கள் அந்தாதித் தொடை பெற்று வந்துள்ளன இப்பெயர்கள் வந்ததன் காரணத்தையும் நிகழ்ச்சிகளின் விவரத்தையும் பாடல்களில் காணலாம். வாசகர்களின் நலங்கருதி பாடல்களையும் அவற்றிற்குரிய பொருளையும் கீழே தருகின்றோம்.

**பன்னிரு நாமங்கள்**

**இரண்டாம் பத்து — ஏழாம் பாசுரம்**

*(கலி நிலைத் துறை)*

2851 கேச வன்தமர் கீழ்மேல் எமரேழ் எழுபிறப்பும்
மாசதி ரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா
ஈச னென்கரு மாணிக்கமென்
செங்கோலக் கண்ணன்வின்னோர்
நாயகன் எம்பிரான் எம்மான் நாரா யணனாலே.

எல்லார்க்கும் சுவாமியால் என்னுடைய அனுபவத்திற்கு உரிய கரிய மாணிக்கம் போன்ற வடிவையுடையவனாய், சிவந்து அழகிய திருக்கண்களை நான் அனுபவிக்கும்படி செய்தவனாய் தேவர்கள் தலைவனாய் எமக்கு உபகார கனாய் எமது பெரியோனுமாகிய நாராயணனால் என்னைச்

சேர்ந்தவர்கள் கீழும் மேலுள்ள ஏழேழ் பிறப்புக்களிலும் பகவத் பக்தராகப் பெற்றார்கள். இப்படிப்பட்ட பெரிய சிறப்பை அடைந்து நமது வாழ்ச்சி வளருகிறபடி என்னே!

2852 நாரணன் முழுஏ ழுலகுக்கும் நாதன் வேதமயன்
காரணம் கிரிசை கருமம் இவைமுதல்வன் எந்தை
சீரணங்(கு) அமரர் பிறர்பல
ரும்தொழுது ஏத்தநின்று
வாரணத் தைமருப்பு ஒசித்த பிரான்என் மாதவனே.

நாராயணனும் எல்லா உலகங்களுக்கும் சுவாமியாய் வேதசொரூபியும் காரணப் பொருள்கள் காரியப் பொருள்கள் பிரயோசனங்கள் ஆகிய இவற்றிற்கு நிர்வாகனும் சீர்மை பொருந்திய திவ்யர்களான தேவர்களாலும் மற்றும் பல பேர்களாலும் வணங்கித் துதிக்கப்பட்டுக் கம்சனது யானையினுடைய கொம்பை முறித்த உபகாரகனும் எனக்கு உரியவனுமான திருமால் என்னை அடிமை கொண்டவன்.

2853 மாதவன் என்றதே கொண்டென்னை
இனிஇப்பால் பட்டது
யாத வங்களும் சேர்கொடேன் என்றென்னுள்
புகுந்திருந்து
தீதவம் கெடுக்கும் அமுதம் செந்தாம
ரைக்கட்குன்றம்
கோதவம் இல்என்கன்னற் கட்டிஎம் மானென்
கோவிந்தனே.

எனக்காகக் கண்ணனாய் அவதரித்த எம்பெருமான் மாதவன் என்று நான் வாயினாற் சொன்ன அளவையே கொண்டு என் விஷயத்தில் இனிமேலுள்ள காலமெல்லாம் ஒருவிதமான குறையும் சேர வொட்டேன் என்று சங்கல் பித்துக்கொண்டு என் உள்ளே பிரவேசித்திருந்து பலவகைப் பாவங்களையும் போக்கியருள்கின்ற பரம யோக்யனாய் செந்தாமரை போன்ற திருக்கண்களையுடையவனாய்

குன்றம்போல் நிலை பெயராமல் இருந்து கோதும் அவமும் இல்லாத கன்னல் கட்டிபோல எனக்கு இனியனாய் இருக் கின்றான்.

2854 கோவிந் தன்குடக் கூத்தன் கோவலன்என்
றென்றேகுனித்து
தேவும் தன்னையும் பாடியாடத் திருத்திஎன்
னைக்கொண்டேன்
பாவந் தன்னையும் பாறக்கைத் தெமரேழ்
எழுபிறப்பும்
மேவும் தன்மைய மாக்கினான் வல்லனெம்
பிரான்விட்டுவே.

சர்வ சக்தனும் எமக்கு உபகாரங்கள் செய்பவனுமான விஷ்ணு பகவான் எமக்குச் செய்தது யாதெனின் கோவிந்தன் என்றும் குடக்கூத்தாடுபவன் என்றும் கோபாலன் என்றும் இத்தகைய திருநாமங்களையே சொல்லிக் கூத்தாடி பரத்வத்தையும் தானான தன்மை யாகிய சௌலப்யத்தையும் புகழ்ந்து பாடித் திரியும்படி கடாட்சித்து அடியேனை ஆட்படுத்திக் கொண்டு எனது பாவங்களையும் ஓட வடித்து எம்மைச் சேர்ந்தவர்கள் ஏழேழ் பிறப்பும் தன்னை அடையும் படியான தன்மையை அருளினான்.

2855 விஷ்ணு விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை
பாதம் கைகள்கண்கள்
விட்டிலங்கு கருஞ்சுடர் மலையே திருவுடம்பு
விட்டிலங்கு மதியம் சீர்சங்கு சக்கரம் பரிதி
விட்டிலங்கு முடியம்மான் மதுசூ தனன்த னக்கே.

நன்றாக விளங்குகின்ற திருமுடியையுடைய சுவாமி யான மதுவைக் கொன்ற பெருமானுக்குத் திருவடிகளும் திருக்கைகளும் திருக்கண்களும் விரிந்து விளங்குகின்ற சிவந்த சுட்டரையுடைய தாமரைப் பூக்களேயாம். திரு

மேனியோ என்றால் நன்கு விளங்குகின்ற நீலவர்ண பிரபையையுடைய மலைபோன்றது. சிறந்த சங்கானது மிக விளங்குகின்ற சந்திரனைப் போன்றது. திருஆழி சூரியனைப் போன்றது.

2856 **மதுசூ தனையன்றி மற்றிலேனென்**
றெத்தாலும் கருமமின்றி
துதிசூழ்ந்த பாடல்கள் பாடியாட
நின்றூழி யூழிதொறும்
எதிர்சூழல் புக்கெனைத் தோர்பிறப்பும்
எனக்கே யருள்கள்செய்ய
விதிசூழ்ந்த தாலெனக் கேலம்மான்
திரிவிக் கிரமனையே

மதுவை முடித்த எம்பெருமானைத் தவிர வேறொரு பற்றுடையேன் அல்லேன் என்று அனுசந்தித்து எந்தப் பொருளினாலும் ஒரு காரியம் இல்லாமல் துதிப்பதன் மூலம் அவனது திருக்குணங்களைக் கொள்ளை கொண்ட பாசுரங் களை நிலை நின்று பாடியாடும்படி எப்போதும் எல்லாப் பிறவிகள் தோறும் எனக்கெதிரில் சூழ்ச்சியோடு அவதரித்து என் பொருட்டே கிருபை பண்ணுதற்கு எனக்கென்று சுவாமி யான திருவிக்ரமனை விதி சூழ்ந்து கொண்டது.

2857 **திரிவிக் கிரமன்** செந்தா மரைக்கணெம் மானென்
செங்கனிவாய்
உருவில் பொலிந்த வெள்ளைப் பளிங்குநிறத்தனன்
என்றென்று உள்ளிப்
பரவிப் பணிந்து பல்லூழி யூழிநின் பாத பங்கயமே
மருவித் தொழும்மன மேதந்தாய் வல்லைகாணென்
வாமனனே!

எனக்காக வாமனாவதார மெடுத்த பகவானே! மூவடி யாலே உலகங்களை எல்லாம் அளந்தவன் என்றும், செந்தாமரை போன்ற கண்களையுடைய சுவாமியென்றும்,

எனக்கு யோக்கியமாய்ச் சிவந்து கனிந்த அதரத்தின் அழகு பொலிந்த சுத்த ஸ்படிக வர்ணமான திருமுத்துக்களை யுடையவன் என்றும் நினைத்து துதித்து வணங்கி நெடுங் காலம் உனது பாதார விந்தங்களில் பொருந்தி அடிமை செய் தற்கு உறுப்பான மனத்தைக் கொடுத்தருளினாய்; நீ சமர்த்தன் அன்றோ?

2858 **வாமனன்** என்மரகத வண்ணன் தாமரைக்
கண்ணினன்
காமனைப் பயந்தாய் என்றென்றுன் கழல்பாடி
யேபணிந்து
தூமனத் தனனாய்ப் பிறவித் துழதிநீங்க என்னைத்
தீமனங் கெடுத்தாய் உனக்கென் செய்கேனென்
சிரீதரனே!

எனது திருமாலே! வாமன மூர்த்தியே யென்று சொல்லி யும் மரகதம் போன்ற ஒளியையுடைய எம்பெருமானே என்று சொல்லியும், தாமரைக்கண்ணனேயென்று சொல்லியும், மன் மதனை மகளாகப் பெற்றவனேயென்று சொல்லியும் உன் திருவடிகளில் பாடி வணங்கிப் பரிசுத்தமான மனத்தை யுடையேனாய்ப் பிறவித் துயரம் தீரும்படியாக என்னைத் தீயமனம் அற்றவனாக ஆக்கினாய். இப்பெரு நன்றி செய்த உனக்கு என்ன கைம்மாறு செய்வேன்.

2859 **சிரீஇதரன்** செய்ய தாமரைக் கண்ணனென்றன்
றிராப்பகல்வாய்
வெரீஇ,அல மந்து கண்கள்நீர் மல்கிவெவ்
வுயிர்த்துயிர்த்து
மரீஇய தீவினை மாளவின் பம்வளர வைகல்வைகல்
இரீஇ உன்னையென் னுள்வைத் தன்னையென்
இருடீகேசனே!

குறிப்பு:— ஸ்ரீதரன் — சிரீஇதரன் — உயிரளபெடை

எம்பெருமானான ரிஷி கேசனே! ஸ்ரீதரனே! என்றும் செந்தாமரைக் கண்ணனே என்றும் இரவும் பகலும் வாய்

பிதற்றிச் சுழன்று கண்களில் நீர் ததும்பப்பெற்று, வெப்பமாக நெடுமூச்செறிந்து, சேர்ந்திருக்கின்ற பாவங்கள் தொலையும் படியாகவும் ஆனந்தம் பெருகும் படியாகவும் எப்போதும் உன்னை என் நெஞ்சினுள்ளே இருத்தி வைத்தாய். இப்படியும் ஓர் உபகாரம் உண்டோ!

2860 இருடி கேசன் எம்பிரான் இலங்கை அரக்கர்குலம்
முருடு தீர்த்த பிரானெம்மான் அமரர் பெம்மான்
என்றென்று
தெருடி யாகில் நெஞ்சே வணங்குதிண்ணம்
அறியறிந்து
மருடி யேலும் விடேல்கண்டாய் நம்பிபற்ப
நாபனையே.

மனமே! நீ அறிவுடையை யாகில் ரிஷிகேசனே என்றும் எம்பிரானே என்றும், இலங்கையிலிருந்த அரக்கர் குலத்திற்கு முருடான இராவணனைத் தொலைத்த பிரானே யென்றும் எம்பெருமானே யென்றும் தேவர்களுக்குத் தலைவனேயென்றும் சொல்லி அவனை வணங்கு; இதைத் திடமாக அறிவாயாக. அறிந்தபின் மீண்டும் கலங்குவாயாகிலும் குணபரிபூரணனான பத்மநாதனை விடாதே கொல்!

2861 பற்ப நாபன் உயர்வற வுயரும் பெருந்திறலோன்
எற்பரன் என்னை யாக்கிக்கொண் டெனக்கே
தன்னைத் தந்த
கற்பகம் என்னமுதம் கார்முகில் போலும்
வேங்கடநல்
வெற்பன் விசும்போர் பிரானெந்தை தாமோ
தரனே.

உலகமெல்லாம் தோன்றுவதற்குக் காரணமான தாமரையைத் திருநாபியில் உடையவனும் வேறு எங்கும் உயர்த்தியில்லையென்னும்படி உயர்ந்த அபார சக்தியை யுடையவனும் என்னிடத்து ஊற்றமுடையவனும் என்னை

உண்டாக்கி அங்கீகரித்து எனக்கே அசாதாரண மாம்படி தன்னைத் தந்த கற்பகமானதும் எனக்கு அமுதம் போன்ற வனும் காளமேகம் போன்றவனும் திருவேங்கடம் என்கிற நல்ல திருமலையை இருப்பிடமாக உடையவனும் தேவர் களுக்குத் தலைவனும் என் தந்தையும் ஆன எம்பெருமான் எனக்குச் சுவாமி.

2862 **தாமோ தரனைத்** தனிமுதல்வனை ஞாலம்
உண்டவனை
ஆமோ தரமறிய ஒருவர்க் கென்றே
தொழும் அவர்கள்
தாமோ தரனுரு வாகிய சிவற்கும் திசைமுகற்கும்
ஆமோ தரமறிய எம்மானை யென்னாழி
வண்ணனையே!

தாமோதரன் என்கிற திருநாமம் உடையவனும் ஒப்பற்ற எல்லா உலகங்களுக்கும் முதல்வன் ஆனவனும் பிரளய காலத்தில் உலகங்களைத் திருவயிற்றில் வைத்து நோக்கின வனுமான எம்பெருமானைப் பகுத்து அறிவதற்கு ஒரு வராலும் சாத்தியமாகாதென்று துணிந்து வணங்குகின்றவர் களான எம்பெருமானுக்கு அவயவ பூதர்களான சிவனுக்கும் பிரமனுக்கும் கடல் வண்ணனான எம்பெருமானை அள விட்டு அறிதல் கூடுமோ!

2863 வண்ண மாமணிச் சோதியை அமரர் தலைமகனை
கண்ணனை நெடுமாலை தென்குரு கூர்ச்சட
கோபன்
பண்ணிய தமிழ்மாலை யாயிரத்துள் இவைபன்
னிரண்டும்
பண்ணில் பன்னிரு நாமப்பாட் டண்ணில்தான்
அணைவிக்குமே.

நல்ல நிறமுடைய நீலமணியின் ஒளியையுடையவனாய் தேவர்களுக்குத் தலைவனாய் கண்ணனாக அவதாரம் செய்தவனாய் எங்கும் வியாபகனாய் உள்ள எம்பெரு

மானைக் குறித்து ஆழ்வார் அருளிச் செய்த தமிழ் மாலை யாகிய இந்த ஆயிரத்தினுள்ளும் பண்ணொடு கூடின பன்னிரு நாமங்களைப் பற்றிய இப்பன்னிரண்டு பாசுரங் களும் சர்வேஸ்வரனுடைய திருவடிகளைச் சேர்ப்பிக்கும்.

**நேரிசை வெண்பா**

*கேசவனால் எந்தமர்கள் கீழ்மேல் எழுபிறப்பும்*
*தேசடைந்தார் என்று சிறந்துரைத்த — வீசுபுகழ்*
*மாறன் மலரடியே மன்னுயிர்க்கெல் லாமுய்கைக்கு*
*ஆறென்று நெஞ்சே அணை.* —பாடல் எண் 17.

இப்பாடலும் இதேபோல் ஒவ்வொரு திருவாய் மொழியின் இறுதியிலும் வரும் பாடல்களும் ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிய திருவாய்மொழி நூற்றந்தாதியாகும்.

குறிப்பு : *2860 பாடல் பொழிப்புரையின் தொடர்பாக இதைச் சேர்த்துக் கொள்க.*

ஐந்து ஞான இந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள் ஆகிற பத்துத் தலைகளை யுடைத்தாகி சம்சாரக் கடல் சூழ்ந்த சரீரபுரத்தில் சுதந்திர பிரபுவாய் இருக்கின்றது மனம். அப்படிப்பட்ட மனத்தைத் திருத்தினதும் இராவண வதம் செய்ததும் ஒக்கும் என்ற கருத்தைக் காட்டுகிறார்.

# திருவாய்மொழி வியாக்கியானங்கள்

## முன்னுரை

வைணவர் வேதமெனப் போற்றும் நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுள் நம்மாழ்வாரால் அருளிச் செய்யப்பட்ட திருவாய்மொழிக்கு 'வியாக்கியானங்கள்' என்னும் பேருரைகள் பலஉள. அப்பேருரைகளின் வரலாற்றையும் அவற்றின் சிறப்புக்களையும் காண்போம்.

## 1. ஆறாயிரப்படி

இது ஆறாயிரம் கிரந்தங்கள் அளவினை உடைய உரை எனப் பொருள்படும். ஒற்றெழுத்துக்கள் தவிர உயிரும் உயிர் மெய்யுமான முப்பத்திரண்டு எழுத்துக்களை உடையது ஒரு கிரந்தம். படி — அளவு. இவ்வாறு ஆறாயிரம் கிரந்தங்களாகிய அளவினை உடைமையால் இது ஆறாயிரப்படி என வழங்கப்படுவதாயிற்று. இறைவனைப் பற்றிக் கூறுகின்ற ஸ்ரீ விஷ்ணு புராணம் ஆறாயிரம் கிரந்தங்களையுடையது. அது போல இறைவனைப் பற்றிக் கூறுகின்ற இத்தமிழ் மறைக்கும் அத்தொகை அளவிலேயே இப்பேருரை அருளிய செய்யப்பட்டது.

உடையவர், எதிராசன், எம்பெருமானார் எனப் பலவாறு போற்றப்படுகின்ற இராமானுஜருடைச்

ஆணையின் பேரில் அவருடைய மானச புத்திரரான திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்னும் பெரியார் திருவாய் மொழிக்கு ஆறாயிரப்படி என்னும் பேருரையை இயற்றினார்.

இராமானுஜர் காலத்தில் ஆசாரியர்கள் பலர் கூடிப் பிள்ளான் என்னும் திருக்குருகைப் பிரான் பிள்ளை என்பவர் மூலமாக ஆழ்வார்கள் அருளிச் செயலின் அரும்பொருளை அனைவரும் அறியும்படி ஒரு வியாக்கியானம் செய்தருளல் வேண்டும் என்று இராமானுசரை வேண்டிக் கொண்டனர்.

இராமானுஜர், "ஆழ்வார்களுடைய அருளிச் செயல் களுக்குப் பொருள் அவரவர்களுடைய அறிவிற்கும் பக்திக்கும் ஏற்ப பலவாறு சுரக்கும். ஆகையால் நாம் செய்யின் அருளிச் செயல்களுக்கு வரம்பு கட்டியது போலாகும். நீரே ஒருபடி திருவாய் மொழிக்கு வியாக்கி யானம் செய்யும்" என்று திருக்குருகைப் பிரானை நியமனம் செய்தார். திருக்குருகைப் பிரான் பிள்ளையும் தம் ஆசாரிய ராகிய உடையவர் நியமனத்தால் திருவாய்மொழிக்கு ஆறா யிரப்படி என்னும் பேருரையை உரைத்தருளினார். உடை யவர் — இராமானுஜர்.

2. ஒன்பதினாயிரப்படி

இப்பேருரை ஒன்பதினாயிரம் கிரந்தங்கள் என்னும் அளவினையுடையது. பிரம சூத்திரத்திற்கு இராமனுசர் அருளிச் செய்த பேருரையாகிய ஸ்ரீ பாஷ்யம் ஒன்பதினா யிரம் கிரந்தங்களையுடையது. அத்தொகையளவில் இயன்றதாகலின் இவ்வுரை ஒன்பதினாயிரப்படி எனப்படுவ தாயிற்று.

நஞ்சீயர் என்னும் பெரியார் தம் ஆசாரியராகிய பட்டர் என்னும் பெருமானிடத்தில் ஆறாயிரப்படி என் னும் பேருரையை உபதேசமாகப் பெற்று அதனைச் சிறிது விரிவாகச் செய்ய நினைத்தார். அதனைத் தம் ஆசிரியப் பெருமானிடத்தில் விண்ணப்பித்து அவர் அனு

மதியின் பேரில் ஒன்பதினாயிரப்படி என்னும் இப்பேருரையை இயற்றியருளினார்.

இவ்வுரை நூலை நஞ்சீயரின் மாணவராகிய வரதராஜர் காவிரி நீரில் தவற விட்டுவிட்டார். பின்னர் இறைவனது அருளால், அதை மறுமுறையும் எழுதி முடித்தார். அதனைக் கண்டு ஆசிரியர் மகிழ்ந்து ஆசி கூறினார். அவரைத் தம் அருகில் வைத்துக்கொண்டு வேத வேதாந்தங்கள் முதலிய சகல சாஸ்திரங்களையும் உபதேசித் தருளினார். நஞ்சீயரால் 'நம்முடைய பிள்ளை' என்று அருளிச் செய்யப்பட்டமையால் வரதராசர்க்கு நம்பிள்ளை என்ற பெயர் வழங்கலாயிற்று.

3. **பன்னீராயிரப்படி**

இது பன்னீராயிரம் கிரந்த அளவினை உடைய பேருரை. ஸ்ரீபாகவதம் பன்னீராயிரம் கிரந்தங்களையுடையது. ஆதலின் அத்தொகையளவில் இப்பேருரை எழுந்தது.

இப்பேருரையை அருளிச் செய்தவர் **வாதிகேசரி அழகிய மணவாள சீயர்,**

இவர் இளமையில் கல்வியறிவில்லாதவர். பின்னர் இவர் தம் ஆசானாகிய பெரிய வாச்சான் பிள்ளையிடம் கல்விகற்றார்;வல்லவரானார். முசல கிசலயம் என்ற காவியம் ஒன்றையும் இயற்றினார். பின்னர் துறவு பூண்டு பிற சமயங்களை வென்று 'வாதி கேசரி' என்ற சிறப்புப் பெயரையும் பெற்றார். முன்னோர்கள் அருளிச் செய்த பேருரைகளைக் கற்றுத் துறை போய் எல்லார்க்கும் எளிதாகவும் விளக்கமாகவும் இருக்குமாறு திருவாய்மொழிக்குப் பன்னீராயிரப்படி என்னும் பேருரையை இயற்றினார். இவர் செய்த வேறு நூல்கள் தமிழிலும் வடமொழியிலும் பலவாம்.

முசல கிசலயம என்பதற்கு உலக்கைக் கொழுந்து என்பது பொருள். இவர் இளமையில் கல்வி பயிலாமல்

பெரியவாச்சான் பிள்ளை அவர்களிடம் சமையற்காரராய் இருந்தார். இறுமாப்புள்ள ஒருவர் இவரை 'முசல கிசலயம்' என்று ஏளனமாகச் சொல்லிவிட்டார். அதன் பிறகு இவர் பெரிய வாச்சான் பிள்ளையிடம் கல்வி கற்றுப் பன்னீரா யிரப்படி என்ற சிறந்த உரை நூலைச் செய்தார். தம்மை ஏளனஞ் செய்த வித்வான்கள் முன்னிலையின் தம் மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ள வடமொழியில் முசல கிசலயம் என்று இவர் ஒரு நூலையும் எழுதி வெளியிட்டார். மானம் படவரின் அதனை இழக்காமல் காத்து வாழ்க்கை யைப் புனிதமாக்கிக் கொள்வதைவிடச் சிறந்த செயல் வேறு ஒன்றும் இல்லை. வாதிகேசரியின் வரலாறு இதனைக் காட்டுகிறது.

## 4. இருபத்து நாலாயிரப்படி

இது இருபது நாலாயிரம் கிரந்த அளவினையுடையது. ஸ்ரீ ராமாயணம் இருபத்து நாலாயிரம் சுலோகங்களை உடையது ஆதலின் அத்தொகையளவில் இப்பேருரை எழுந்தது.

இப்பேருரையை அருளிச் செய்தவர் **பெரிய வாச்சான் பிள்ளை** என்னும் பெரியார்.

நம்பிள்ளை தமது விருப்பத்துக்கு கந்த மாணவராய்த் தம்பக்கலில் எல்லா சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்த பெரிய வாச்சான் பிள்ளையைப் பார்த்து, "நீர் திருவாய் மொழிக்கு ஒரு வியாக்கியானம் செய்யும்" என்று கட்டளையிட்டருள அவரும் தம் ஆசாரியருடைய நியமனத்தை மேற்கொண்டு இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானத்தைச் செய் தருளினார். இவ்வாசிரியர் வேறு பல நூல்களும் இயற்றியுள் ளார்.

## 5. முப்பத்தாறாயிரப்படி

இப்பேருரை முப்பத்தாறாயிரம் கிரந்தங்களை யுடையது.

இராமானுசர் செய்தருளியஸ்ரீ பாஷ்யத்தின் ஆழ்பொருள் எல்லாம் விளங்கும் பொருட்டு சுதரிசன பட்டர் என்பவர் இயற்றிய சுருதப் பிரகாசிகை என்னும் நூலைப் போல இப் பேருரையும் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களைக் கொண்டது. இப்பேருரை ஈடு என்றபெயராலேயேவழங்கும். ஈடு என்னும் சொல் ஆகு பெயராக உடலின் மேல் இடப்படுவதாகிய கவசத்தை உணர்த்தும். கவசம் உடலைக் காத்தல்போன்று இப் பேருரையும் கற்போராலும், எழுதுவோராலும், வேற்று மக்களாலும் தன்னிலை திரிந்து மாறுபடாதபடி திருவாய் மொழியினைக் காத்து நிற்றலின் இதற்கு ஈடு என்ற தனிச் சிறப்புப் பெயரினை நம் பெருமக்கள் வழங்கினார்கள். இதனை நம்பிள்ளை ஈடு என்றும் வழங்குவர்.

இப்பேருரையை இயற்றியவர் வடக்குத் திருவீதி பிள்ளை என்னும் பெரியார்.

வடக்குத் திருவீதிப்பிள்ளை தம் ஆசாரியரான நம்பிள்ளை ஒருமுறை திருவாய்மொழி சம்பந்தமாக நாடோறும் அருளிச் செய்து கொண்டுவரும் பிரசங்கங் களைக் கேட்டு எழுதி வைத்த குறிப்பே ஈடு முப்பத் தாறாயிரப்படி என்பது. வடக்குத் திருவீதிப்பிள்ளை ஒரு நாள் இதனைத் தம் ஆசாரியரான நம்பிள்ளையின் திரு முன்னர் கொண்டு சென்று வைக்க அவர் அதனைப் பார்த் தார். யானை கோலஞ் செய்து புறப்பட்டாற் போன்று கம்பீரமான நடையழகோடு — சுருதப் பிரகாசிகை அளவில் முப்பத்தாறாயிரம் கிரந்தங்களோடு கூடியதாய் இருக்கக் கண்டு மகிழ்ந்தார். ஆயினும் தம் அனுமதி இன்றி எழுதப் பட்டதால் அவர் அதனை வாங்கிக் கட்டி உள்ளே வைத்து. விட்டார். பின்னர்த் திருவரங்க நாதருடைய ஆணையால் தம்முடைய மாணவருள் ஒருவரான மாதவப் பெருமாள் என்பவரிடம் அதனைக் கொடுத்து அவர் மூலமாக உலகிற் பரப்பினார்.

**வியாக்கியானங்களின் பெருமை**

திருவாய்மொழி பகவத் பிரபந்தம் என்று கூறப்படுவது போன்று இப் பேருரைகளாகிய வியாக்கியானங்களும் பகவத் விஷயம் என்றே கூறப்படும். திருவாய்மொழி இறைவனால் மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வாரால் அருளிச் செய்யப் பட்டது போன்று வியாக்கியானங்களும் இறைவனுடைய திருவருளுக்கு முற்றும் இலக்காய், ஆழ்வார்களுடைய பேரருளுக்கும் பாத்திரராய், வடமொழி தென்மொழிகளில் பேரறிவு படைத்தவர்களாகிய பெருமக்களால் செய்யப் பட்டன. இவ்வியாக்கியானங்கள் மணிப்பிரவாளம் என்னும் நடையில் அமைந்தவை. சுவானுபவத்தோடு செய்யப் பட்டவையாதலின் கற்போர்க்கும் சுகானுபவத்தை உண் டாக்கக் கூடியவை.

இவ்வியாக்கியானங்களுள் ஈடு முப்பத்தாறாயிரப்படி என்னும் பேருரை தனிச்சிறப்பு வாய்ந்தது. பொருளுணர் வோடு பயிலப் பயிலப் பேரின்பம் பயப்பது. சொல்லாற்றல், பொருளாற்றல்கள் அமைந்தது. சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், மேற்கோள்கட்குப் பொருள் கூறுதல், பதிகத் தொடர்பு கூறுதல், பாசுரத் தொடர்பு கூறுதல், முதலிய வற்றால் மிகச் சிறப்புற்று விளங்குவது.

**முடிவுரை**

திருவாய்மொழிக்கு வியாக்கியானங்கள் என்னும் பேருரைகள் இன்றேல் அத் தமிழ்மறையின் பொருட் சிறப் புக்களையெல்லாம் அறிந்து கூற வல்லார் ஒருவரும் இலர். இத்தகைய பேருரைகளைச் செய்தருளிய அப்பெரியார் களுக்கு நாம் செய்யும் கைம்மாறு யாதொன்றும் இல்லை.

குறிப்பு: மணிப் பிரவாள நடை என்பது தமிழும் வட மொழியும் கலந்து எழுதப்பட்ட நடை. நாலாயிரத்திரத் திவ்வியப் பிரபந்தங்கள் யாவும் தூய தமிழ்ப் பாடல்கள். வைணவ உரையாசிரியர்கள் காலத்தில் மணிப்பிரவாள

நடை எல்லோராலும் சிறப்பாகக் கருதப்பட்டது போலும். அதனால் இவ்வாறு எழுதினார்கள் என்று கருதவேண்டி யுள்ளது. இப்போது பேச்சு வழக்கிலும், எழுத்து வழக்கிலும் ஆங்கிலம் கலந்து வழங்கப்படுகிறது. அதை நாகரிகமாகவும் இப்போது மக்கள் கருதுகின்றனர். தனித்தமிழ் இயக்கத் தாருக்கு இது உடன்பாடன்று.

வடகலையார் வடமொழிச் சார்புடையவர்கள். எங்களுக் கும் திறன் உண்டு என்று காட்டத் தென்கலையார் இந்த மணிப்பிரவாள நடையைக் கையாண்டனர் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். வடகலை, தென்கலை கருத்து வேறு பாடு இன்றும் நிலவுவதைக் காண்கிறோம்.

# சடகோபர் அந்தாதி

## முன்னுரை

கம்பநாட்டாழ்வார் நம்மாழ்வார் மீது பாடிய 100 பாடல்களைக் கொண்டது இந்நூல். அந்தாதித் தொடை பெற்றது. இவை யாவும் கட்டளைக் கலித்துறைப் பாடல் களே. சொற்சுவை பொருட்சுவை கொண்டது.

## நூல் எழுந்த வரலாறு

ஸ்ரீரங்கத்தில் தமிழ் இராமாயணத்தை அரங்கேற்றத் தொடங்கும்போது, நம் சடகோபனைப் பாடினையோ வென்று நம்பெருமாள் விஞ்சிய ஆதரத்தால் கேட்பக் கம்பன் விரைந்துரைத்த செஞ்சொல் அந்தாதி கலித்தொகை நூறும் சடகோபரந்தாதி எனப் பெறும். இதில் புகழ்போருள் சட கோபர் அருளிய திருவாய்மொழி. திருவாய்மொழியில் விஷயம் திருமால். இங்ஙனமாதலால்,

தேவிற் சிறந்த திருமாற்குத்
தக்கதெய் வக்கவிஞன்
பாவிற் சிறந்த திருவாய்
மொழிபகர் பண்டிதனே
நாவிற் சிறந்தஅம் மாறற்குத்
தக்கநன் னாவலவன்
பூவிற் சிறந்த ஆழ்வான்
கம்பநாட்டுப் புலமையனே.

என்று ஒரு தனியன் வழங்கி வருகின்றது. அதன் பொருளா வது திருமாலைப் பாடவல்லவர் சடகோபரே; சடகோப ரைப் பாடவல்லவர் கம்ப நாடரே என்பதாம். சடகோபர் காலத்தில் அவரைப் புகழ்ந்து ஒரு பதிகம் பாடினவர் மதுர கவியாழ்வார்; பிற்காலத்தில் பாடிய கம்பர் பத்துப் பதிக மாகப் புகழ்ந்துரைத்தார் என்று,

மன்றே புகழும் திருவழுந்
தூர்வள்ளல் மாறனைமுன்
சென்றே மதுர கவிப்பெரு
மாள்தென் தமிழ்த்தொடையில்
ஒன்றே பதிகம் உரைத்தவன்
பொன்னடி உற்றுநின்றான்
என்றே பதிகம் பதிகம
தாக இசைத்தனனே.

என்கிற பாயிரம் வழங்குகின்றது.

நூல்

1. சுடரிரண் டேபண்டு மூன்றா
யினதுகள் தீர்ந்துலகத்(து)
இடரிரண் டாய்வரும் பேரிருள்
சீப்பன எம்பிறப்பை
அடரிரண் டாமலர்த் தாளுடை
யான்குரு கைக்கரசன்
படரிருங் கீர்த்திப் பிரான்திரு
வாய்மொழிப் பாலொடுமே.

ஆதிகால முதல் இருளைப் போக்குவன சூரியன் சந்திரன் என்னும் சுடர்கள் இரண்டே. குற்றந்தீர்ந்த இவ் வுலகின்கண் நல்வினை தீவினை என்னும் இருவினைகளை யும் தீர்ப்பனவாயும், எம்பிறப்பைப் போக்கவல்ல மலர் போன்ற இரண்டு பாதங்களையுடையவனும் திருக்குருகூர் அரசனும் சிறந்த புகழுடைவனுமான நம்மாழ்வார் அருளிச்

செய்த திருவாய்மொழியோடு சுடர்கள் மூன்றாயின என்பதாம்.

2. மொழிபல வாயின செப்பம்
பிறந்தது முத்தியெய்தும்
வழிபல வாயவிட் டொன்றா
யதுவழு வாநரகக்
குழிபல வாயின பாழ்பட்
டதுகுளிர் நீர்பொருநை
சுழிபல வாயெழு குங்குரு
கூரெந்தை தோன்றலினே.

குளிர்ந்த நீர்ப்பெருக்கினையுடைய தாமிரபரணி நதி பாயும் திருக்குருகூர்ப் பிரானாகிய நம்மாழ்வார் தோன்றிய படியினால், பல மொழிகளிலும் திருவாய்மொழியாகிய செந் தமிழ் மொழி ஒன்றே சிறப்பாயிற்று. முத்தியை அடையும் வழிகள் பலவாய் இருந்த போதிலும் நம்மாழ்வார் கூறிய பரமபதமே ஒன்றாயிற்று. நரகங்கள் பலவாக இருந்தவை தூர்ந்து போயின என்பதாம்.

3. கவிப்பா அமுதம் இசையின்
கறியொடு கண்ண னுண்ணக்
குவிப்பான் குருகைப் பிரான்சட
கோபன் குமரிகொண்கன்
புவிப்பா வலர்தம் பிரான்திரு
வாய்மொழி பூசுரர்தம்
செவிப்பால் நுழைந்துபுக் குள்ளத்து
ளேநின்று தித்திக்குமே.

கவிப்பா அமுதம் இசையாகிய கறியோடு கண்ணன் உண்பதற்காகக் குவித்தவனும், திருக்குருகூர் பிரானும், சட கோபனும், தென்குமரி நாட்டுத் தலைவனும் உலகிலுள்ள புலவர்களுக்குத் தலைவனும் ஆகிய நம்மாழ்வார் அருளிச்

செய்த திருவாய்மொழி அந்தணர்களின் காதுகளில் நுழைந்து நின்று தித்திக்கும் என்பதாம்.

4. ஆயிர மாமறைக் கும்அலங்
காரம் அருந்தமிழ்க்குப்
பாயிரம் நாற்கவிக் குப்படிச்
சந்தம் பனுவற்கெல்லாம்
தாய்இரு நாற்றிசைக் குத்தனித்
தீபம்தண் ணங்குருகூர்ச்
சேய்இரு மாமர புஞ்செவ்வி
யான்செய்த செய்யுட்களே.

குளிர்ந்த நீர்ப்பெருக்கினையுடைய திருக்குருகூரில் எழுந்தருளிய நம்மாழ்வாரின் திருவாய்மொழிச் செய்யுட்கள் ஆயிரம் சாகைகளையுடைய வேதத்திற்கு முடிமணியாயும், அருந்தமிழுக்குப் பாயிரமாகவும் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிக்கும் ஒப்புக் காண்பதாகிய அழகுடையனவாகவும், பாடல்களுக்கெல்லாம் தாயாகவும் எண்திசைகளுக்கும் ஒப்பற்ற தீபமாகவும் விளங்குகின்றன.

5. ஆற்றிற் பொதிந்த மணலின்
தொகையரு மாமறைகள்
வேற்றிற் பொதிந்த பொருள்களெல்
லாம்விழு மார்க்கமலம்
சேற்றிற் பொதியவிழ்க் குங்குரு
கூர்செஞ் சொற்பதிகம்
நூற்றிற் பொதிந்த பொருளொடு
கூறும் நுவல்கிலவே.

சேற்றில் விழுமிய கமல மலர்கள் மலர்கின்ற திருக்குருகூரில் அவதரித்த சடகோபன் திருவாய் மலர்ந்தருளிய திருவாய் மொழியில், எண்ணற்ற வேதங்கள் கூறும் பொருள்களெல் லாம் பொதிந்துள்ளன. அவை வேறு ஒரு கூறும் நுவல்கில என்பதாம்.

6. உயிருருக் கும்புக் குணர்உருக்
   கும்கூட லத்தினுள்ள
செயிருருக் கொண்டநந் தீங்குருக்
   கும்திரு டித்திருடித்
தயிருருக் குந்நெய்யோ டுண்டா
   னடிச்சட கோபன்சந்தோ(டு)
அயிருருக் கும்பொரு நற்குரு
   கூரெந்தை யந்தமிழே.

ஆயர்பாடியில் திருடித் திருடி, தயிரையும் நெய்யையும் உண்டவனாகிய கண்ணபிரானது அடியாகிய சடகோபம் சந்தனத்தோடு கண்ட சர்க்கரையும் அனுபவிக்கும் நல்ல திருக்குருகூர் எந்தை அருளிச் செய்த திருவாய் மொழி உயிரை உருக்கும். உள் சென்று உணர்வை உருக்கும். உடலோடு கூடிய கோபம் முதலிய தீக்குணங்களை அழிக்கும் என்பதாம்.

7. சொல்லென் கெனோமுழு வேதச்
   சுருக்கென் கெனோஎவர்க்கும்
நல்லென் கெனோஉண் ணு நீரென்
   கெனோமறை நேர்நிறுக்கும்
நல்லென் கெனோமுதிர் ஞானக்
   கனியென் கெனோபுகல
வல்லென் கெனோகுரு கூரெம்
   பிரான்சொன்ன மாலையையே.

ஆழ்வார் திருநகரியில் அவதரித்த எம்பிரான் சொன்ன திருவாய்மொழி என்னும் மாலையைத் திருமாலின் புகழ் என்று சொல்வேனோ? முழுமையான வேதங்களின் சங்கிரகம் என்பேனோ? உலகிலுள்ளார் அனைவர்க்கும் சோறு என்பேனோ? உண்ணும் நீரென்று சொல்வேனோ? தராசின் ஒருதட்டில் வேதங்களை வைத்து மற்றொருதட்டில் அவைகளை நிறுத்துப் பார்க்கும் நிறைகல் என்பேனோ? முதிர்ந்த ஞானக் கனியென்று கூறுவேனோ? என்னால்

அதன் பெருமையைச் சொல்ல முடியுமோ என்பதாம். சங்கிரகம் — சாரம்.

8. உயிர்த்தா ரையிற்புக் குறுகுறும்
பாமொழி மூன்றனையும்
செயிர்த்தார் குருகைவந் தார்திரு
வாய்மொழி செப்பலுற்றால்
மயிர்த்தாரை கள்பொடிக் கும்கண்கள்
நீர்மல்கும் மாமறையுள்
அயிர்த்தார் அயிர்த்த பொருள்வெளி
யாம்எங்கள் அந்தணர்க்கே.

முக்குற்றங்களையும் வெறுத்தவர் (உலகப் பற்றுக்களை விட்டு நீங்கியவர்) ஆகிய குருகைப் பிரான் திருவாய் மலர்ந் தருளிய திருவாய் மொழியைச் சேவித்தால் எங்கள் அடியார் களுக்கு உடல் புளகாங்கிதங் கொள்ளும்; கண்களில்ஆனந்த பாஷ்பம் பொழியும்; வேதங்களைச் சந்தேகித்தவர் மனத் திலுள்ள சந்தேகங்களுக்கெல்லாம் விளக்கம் கிடைத்து விடும் என்பதாம்.

9. மூர்த்தத் தினைஇம் முழுவே
முலகும் முழுதுகின்ற
தீர்த்தத் தினைச்செய்ய வேதத்
தினைத்திரு மால்பெருமை
பார்த்தற் கருளிய பாரதத்
தைப்பணித் தானும்நின்ற
வார்த்தைக் குருகைப் பிரானும்கண்
டான்அம் மறைப்பொருளே

(மூர்த்தத்தினை — என்பது முதல் அம்மறைப் பொருள் பாரதத்தைப் பணித்தானும்—குருகைப் பிரானும் கண்டான்) என்பதுவரை இதன் பொருள் பாரதத்தைத் பணித்தானும் மறை பொருளைக் கண்டான். குருகைப் பிரானும் மறைப் பொருளைக் கண்டான் என்பதாம், நின்ற வார்த்தை

என்பது திருவாய்மொழி. அதாவது: கண்ணபிரானும் வேதங்களைக் கண்டார். குருகைப் பிரானாகிய நம்மாழ்வாரும் திருவாய்மொழியாகிய வேதத்தைக் கண்டார் என்பது பொருள்.

10. பொன்னை யுரைப்பதப் பொன்னொடன்
றேபுல மைக்கொருவர்
உன்னை யுரைத்துரைத் தற்குள
ரோஉயர் நாற்கவியும்
பின்னை யுரைக்கப் பெறுவதல்
லாற்பெருந் தண்குருகூர்த்
தென்னை யுரைக்கும் இயற்கும்
இசைக்குஞ் சிகாமணியே.

குளிர்ச்சி பொருந்திய குருகூரில் அவதரித்த சிகாமணியே! ஆணிப் பொன்னைக் கொண்டு ஏனைப் பொன்னின் மாற்றை யறிவதுபோல் உம்மைக் கொண்டு ஏனையோர் புலமையை அறியலாம். நாற்கவி என்கிற பெயர் பின் உண்டாவதன்றி உமக்குமுன் உண்டானதன்றே. உமக்கு நீரே உவமை; உவமை வேறிலர் என்பதாம்.

11. பாவைத் திருவாய் மொழிப்பழத்
தைப்பசுங் கற்பகத்தின்
பூவைப் பொருகடற் போதா
வமுதைப் பொருள்சுரக்கும்
கோவைப் பணித்தஎங் கோவையல்
லாஎன்னைக் குற்றங்கண்டென்
நாவைப் பறிப்பினும் நல்லரன்
றோமற்றை நாவலரே.

கற்பகத் தருவின் பூ திருப்பாற்கடலில் வாராத அமுது—கேட்டதையெல்லாம் தரவல்ல காமதேனு — இவைகளுக்கும் மேலான திருவாய் மொழிப் பழத்தை அருளிய ஆழ்வாரை

யல்லது பிற விஷயங்களில் சென்ற என் நாவை என் நாவலர்கள் பறிப்பினும் தவறின்று என்பதாம்.

12. நாவலந் தீவிற் கவிகளெல்
லாஞ்சில நாள்கழியப்
பூவலந் தீவது போல்வ அல்
லால்குரு கூர்ப்புலவன்
கேவலந் தீங்கறுப் பான்கவி
போலெங்கும் போய்க்கெழுமிக்
கூவலத் தீம்புன லுங்கொள்
ளுமேவெள்ளங் கோளிழைத்தே.

கிணற்றுநீரை வெள்ளங் கொள்ளாது என்னும் பழமொழிப்படி ஏனைக் கவி வெள்ளம் அந்தர்யாமியைத் தோன்றக் காட்டா. ஆழ்வாருடைய கவிவெள்ளம் அதனையும் தோன்றக் காட்டும். அந்தர் யாமித்வம் (அருவ நிலை) மறைந்திருந்து அருள்பாலிக்கும் தன்மை. பூமிக்குள் மறைந்திருக்கும் நீரைப் போன்றது.

13. உரிக்கின்ற கோடலின் உந்துகந்
தம்என ஒன்றுமின்றி
விரிக்குந் தொறும்வெறும் பாழாய்
விடும்பிறர் புன்கவிமெய்
தெரிக்கின்ற கோச்சட கோபன்தன்
தெய்வக் கவிப்புயல்
சுரிக்கின்ற நுண்மணல் ஊற்றெடுக்கும்
தோண்டச் சுரத்தலினே.

வெண்காந்தள் மலர் மணமின்றி மலரும். அதுபோல மற்றப் புலவர்கள் பாடும் பாடல்கள் பயனின்றிக் கழியும். சடகோபருடைய தெய்வீகப் பாடல்கள் தோண்டத் தோண்டச் சுரக்கும் மணற்கேணி போல ஊற்றெடுக்கும் என்பதாம்.

14. பாடுங் கறங்கும் சிறைவண்டு
பாடப்பைந் தாட்குவளைத்
தோடுங் கறங்கும் குருகைப்
பிரானிச் சுழல்பிறவி
ஓடுங் கறங்கன்ன வாழ்க்கையை
நீக்கி உணர்வுதவி
வீடுந் திறந்துதந் தானைஎஞ்
ஞான்றும் விடகிலமே.

சிறைவண்டு பாடும் பைந்தாள் குவளை மலர் சுழன்றாடுகின்ற குருகைப் பிரான், சுழல்கின்ற பிறவியாகிய காற்றாடி வாழ்க்கையை நீக்கி, உணர்வு தந்து பரம பதத்தின் கதவுகளைத் திறந்தவனாவான். அவனை எஞ்ஞான்றும் விட்டுப் பிரியோம் என்பதாம்.

15 கற்றும் செவியுறக் கேட்டும்
பருகிக் களித்துமுள்ளே
முற்றும் உலகப்பெய்தும் மூழ்கிக்
குடைதும் முகந்துகொடும்
நிற்று நிலையுற நீந்துதும்
யாநிதம் மாறனெம்மை
விற்றும் விலைகொள் ளவும்உரி
யான்கவி வெள்ளத்தையே.

நாம் மாறனது கவிவெள்ளத்தை நாள்தோறும் கற்போம்; செவியுறக் கேட்போம்; பருகிக் களிப்போம்; அதன் உள்ளேமூல்கிக் குளிப்போம்; முகந்து கொள்வோம்; நின்று நிலைபெற நீந்துவோமாக என்பதாம். மாறன் எம்மை விற்றும் விலைக் கொள்ளவும் உரியான். நாம் அவன் உடைமை.

# விசிஷ்டாத் வைதம்

## தோற்றுவாய் — வைணவம்

நம் நாட்டில் பிரதானமாய் விளங்கும் சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சாக்தம், சௌரம் முதலான பல சமயங்களின் விளக்கங்களைப் பதினெட்டுப் புராணங்களிலும், உபபுராணங்களிலும் காணமுடிகிறது.

வைணவ புராணங்களுள் மிகவும் ஏற்றம் படைத்து விளங்குவது விஷ்ணுபுராணம். இதிலிருந்து பல மேற்கோள்களைக் காட்டியே வைணவ சமயம் ஓங்கி வளர்கிறது. இதில் ஸ்ரீமந் நாராயணனுடைய பரதத்துவ நிர்ணயம் சித்தாந்தம் செய்யப்படுகிறது. வைணவ சமயத்தில் திருமால் ஐந்து சொரூபங்களில் வர்ணிக்கப்படுகிறார்.

## இறைவன் தன்மைகள்

வைணவ சம்பிரதாயத்தில் இறைவனின் ஐந்து நிலைகளுக்கு நீரின் ஐந்து தன்மைகளை உவமையாகக் கூறுவர். எங்ஙனமெனின்,

**1. அந்தர் யாமித்துவம் (அருவ நிலை)**

மறைந்திருந்து அருள்பாலிக்கும் தன்மை பூமிக்குள் மறைந்திருக்கும் நீரைப் போன்றது.

2. **பரத்துவம்** (*வியாபகம்*)

*எங்கும் நிறைந்திருந்து அருள் பாலித்தல் மழை நீர் போன்றது.*

3. **வியூகம்** (*அணி வகுத்தல்*)

*அணிவகுத்து நின்று பாலித்தல் திருப்பாற்கடல் போன்றது.*

4. **விபவம்** (*மனித உருவில் காட்சியளித்தல்*)

*உலகில் அவதாரமெடுத்து அருள் பாலித்தல் ஆற்றுநீர் போன்றது. ஓடிக் கொண்டேயிருத்தல்.*

5. **அர்ச்சாவதாரம்** (*சிலை உருவம்*)

*கோயில்களில் கற்சிலைகளாக இருந்து அருள் பாலித்தல். அக்கோயில்களிலுள்ள குளத்துநீர் (நீர் நிலைகள்) போன்றது. தேங்கி நிற்கும் நீர் நிலைகள்.*

நம்மாழ்வார் எம்பெருமானது ஐந்து நிலைகளையும் பற்றித் தமது திருவாய் மொழியில் பாடியுள்ளார். இதைச் சற்று விளக்க வேண்டுமானால்:—

1. **அந்தர்யாமித்துவம்**:— பகவான் எங்கும் நிறைந்து இருக்கிறார். பிரமதேவன் தொடங்கி, ஈ எறும்புவரை அனைத்திலும் உயிர்க்கு உயிராய் இருந்து செயலாக்குகிறான்.

2. **பரத்துவம்**—ஸ்ரீ வைகுந்தத்தில் கொலுவீற்றிருக்கும் காட்சி என்றாலும் அங்கிருந்தே அனைவர்க்கும் அருள் பாலித்தல்.

3. **வியூகம்** — பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் என்னும் நிலையே வியூகம் ஆகும். இராம, கிருஷ்ண அவதாரங்களுக்கு மூலகாரணமே திருப்பாற்கடலாகும். 'தேவர்' களின் குறைகளைக் கேட்டு அவைகளைப் போக்குகிறான். சங்கர்ஷணன், வாசுதேவன், பிரத்யும்னன், அனிருத்தன்,

இந்த மூர்த்திகளுக்குத் திருப்பாற்கடல் முதலான ஸ்தானங்களில் இருப்பு. கேசவன் தொடங்கி தாமோதரன் ஈறாக இருக்கும் மூர்த்திகள் ஸ்தானம் வியூகம். மார்கழி மாதம் தொடங்கி ஒவ்வொரு மாதத்திற்கும் ஒரு மூர்த்தியாக இருந்து வழிபாட்டுக்குரிய பரமனாகிறார்.

1. மார்கழி — கேசவன்
2. தை — நாராயணன்
3. மாசி — மாதவன்
4. பங்குனி — கோவிந்தன்
5. சித்திரை — விஷ்ணு
6. வைகாசி — மதுசூதனன்
7. ஆனி — திரிவிக்ரமன்
8. ஆடி — வாமனன்
9. ஆவணி — ஸ்ரீதரன்
10. புரட்டாசி — ரிஷிகேசன்
11. ஐப்பசி — பத்மநாபன்
12. கார்த்திகை — தாமோதரன்

4. விபவம் — பெருக்காறு போன்றது. வானவர்களுக்குத் துன்பம் ஏற்படும் போதெல்லாம், பகவான் பல்வேறு அவதாரங்கள் எடுத்து, அவர்களின் துன்பங்களைக் களைந்து, அவர்களைக் காப்பாற்றினார். துஷ்டர்களை வதித்து, சாதுக்களைப் பரிபாலித்து பல வைபவம் நிறைந்த செயல்களைச் செய்ததாலே விபவம் எனப் பெயர் படைத்தது.

5. அர்ச்சாவதாரம் பகவானுடைய ஐந்து சொரூபங்களில் அர்ச்சாவதாரமே தலை சிறந்தது. அகில உலகத்திலும் வழிபாடு என்பது அர்ச்சாவதாரத்தில்தான் இருக்கிறது. புண்ணிய தலங்கள் பலவற்றிலும் பகவான் எழுந்தருளியிருக்கும் நிலை அர்ச்சாவதாரம் ஆகும். மண்ணுலகில் இருக்கும் நம்மவரின் குறைகளைக் கேட்டு, அவைகளைக் களைந்து, அருள்பாலித்து வருகிறான் ஸ்ரீமன் நாராயணன். இந்த உருவ வழிபாட்டால் தான் நமக்குப் பக்தி செழிக்கும்.

எம்பெருமானுடைய உருவத்தை மனதில் நினைத்து, அவனைத் தியானித்து அவனுடைய அருளைப் பெறுவது அர்ச்சாவதாரத்தில் தான். அடியவர் விரும்பும் வகையில் அவன் அமைகிறான்.

வேதத்தை அனுசரித்த இதிகாசங்களிலும், புராணங்களாலுமே வைணவம் ஓங்கி வளர்கிறது. ஆழ்வார்களுடைய அருளிச் செயலில் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் எல்லாமே நன்கு கொண்டாடப்படுகிறது. ஆழ்வார்களுடைய தமிழ் மறைக்கு மிகவும் ஏற்றம் கொடுத்து, நாத முனிகள் நாளிலிருந்து நிகரில்லாத சமயமாய் வைணவம் திகழ ஆரம்பித்தது.

**சங்க காலம்**

தமிழ் கூறும் நல்லுலகில் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமேயே திருமால் வழிபாடு சிறந்து திகழ்ந்து வந்திருக்கிறது. காடும் — காடு சார்ந்த இடமாகிய முல்லை நிலத்துக்குரிய தெய்வம் திருமாலே.

'மாயோன் மேய காடுறை உலகம்' என்கிறது பழம் பெரும் காப்பியமான தொல்காப்பியம். சங்க இலக்கியங்களான நற்றிணை, பரிபாடல் முதலியவற்றில் திருமாலைப் பற்றிய பல பாடல்களைக் காண முடிகிறது. சிலப்பதிகாரத்தில், திருவேங்கடம், திருவரங்கம், திருவனந்தபுரம் முதலான திருமால் கோவில் கொண்டருளிய திருத்தலங்கள் குறிப்பிடப் படுகின்றன. ஆய்ச்சியர் குரவையில், திருமால் செய்தருளிய அவதாரங்களில் இராமன், கிருஷ்ணன், திரிவிக்ரமன் முதலான அவதாரங்கள் குறிப்பிடப்படுகின்றன.

தாதை ஏவலின் மாதுடன் போகி
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீ அறிந் திலையோ நெடுமொழி அன்றோ

ஊர்காண் காதை 45—49.

மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடிய
தாவியசே வடிசேப்பத் தம்பியொடும் கான்போந்து
சோஅரணும் போர்மடியத் தொல்இலங்கைக் கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவிஎன்ன செவியே
திருமால்சீர் கேளாத செவிஎன்ன செவியே.

(ஆய்ச்சியர் குரவை 35.)

இது போன்ற பாடல்களைப் பார்த்தால் இராமாயணமும் மகாபாரதமும் தமிழகத்தில் எவ்வளவு பரந்து விளங்கின என்பது தெளிவாகிறது. பரிபாடலில் பல பாட்டுக்கள் திரு மால் வழிபாட்டை உணர்த்துகின்றன.

அருமை நன்கறியினும் ஆர்வம் நின்வயின்
பெருமையின் வல்லாய் யாம்இவண் மொழிபவை
மெல்லிய எனாஅ வெறாஅது அல்லியந்
திருமார்ப! நீயருளல் வேண்டும்

—இந்தப் பாடலில் திருமாலுடைய அந்தர்யாமித்வம் சொல்லப்படுகிறது.

ஆழ்வார்கள் அருளிச் செயல்களும், ஐந்து வடிவங் களைக் கொண்ட ஸ்ரீமந் நாராயணனுக்குப் பாமாலைகளாக அமைந்தன. தொன்று தொட்டு வாழ்ந்து வரும் இந்த வைணவ சமயம் நாதமுனிகள் தொடங்கி அழகோடு விளங்கத் தலைப்பட்டது.

வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் மாத்திரமன்றி தமிழ் மறைகளுக்கு மிக மிக ஏற்றந் தந்து, தமிழ் மறை களின் விசேஷமான பிரமாணங்களைக் கொண்டே சம யத்தை நிறுத்தினர். பிரம்ம சூத்திரங்களுக்கோ உபநிடதங் களுக்கோ பொருள் சொல்ல வந்த முன்னோர்கள் ஆழ் வார்கள் அருளிச் செயல்களில் உள்ள அபிப்பிராயங்களையே கொண்டு வியாக்கியானங்களையும் விரிவுரையையும் செய்தனர்.

### விசிஷ்டாத் வைதம்

இந்தப் பழையகால வைணவ சமயம்தான் ஸ்ரீ ராமானுஜர் நாள் தொடங்கி, 'விசிட்டாத் வைதம்' என்று பெயர் பெற்றது. இவரே இம் மதத்தை உலகில் பிரசித்தமாக்கினவர். ஸ்ரீ பெரும்புதூரில் பிறந்து வளர்ந்த ஸ்ரீ ராமானுஜர் வேதாந்தத்துக்கு விசிஷ்டாத்வைத பரமாய் உரை செய்தார்.

விசிஷ்டாத்வைத சமயத்தின் மூன்று தத்துவங்களாக சித்—அசித்—ஈஸ்வரன் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. அத்வைதம் என்றால் ஏகத்வம். விசிஷ்டம் என்றால் விசேஷணத்வம். விசேஷணமாவது, சித்தையும் அசித்தையும் சரீரமாக உடையது என்பது பொருள். சித்தையும் அசித்தையும் லட்சணங்களாகக் கொண்டது. ஏகத்துவம், இந்த சமயத்தில் உலகம் உண்மை. ஜீவன் வேறு. பரமாத்மா வேறு. சித்தும் உண்மைப் பொருளே. அசித்தும் உண்மைப் பொருளே. பரமாத்மா இவ்விரண்டோடு பிரிவுறாதபடி அமைந்திருக்கிறது. பரமாத்மா ஒன்றிற்கே ஸ்வாதந்திரியம். சித்தும் அசித்தும் பரமாத்வையே சார்ந்து இருக்கும்.

விசிஷ்டத்வைத சித்தாந்தத்துக்கு அனுகூலமாக பல வேத வசனங்களும், உபநிஷத மந்திரங்களும் உண்டு. நிர்க்குணமான வேத வசனங்களுக்கு ஹேய குணங்கள் அற்றவன் என்பது பொருள். ஜீவனுக்கு பிரகிருதி சம்பந்தத்தால் ஏற்படுகிற நிர்ப்பந்தங்கள் சுக துக்கங்கள் இவை எல்லாம் பரமாத்மாவுக்குக் கிடையாது. மகாலட்சுமியை விட்டு இணைபிரியாத சொரூபமாயிருக்கும்.

### மோட்சம்

மோட்சம் இரண்டு வகை. மோட்சம் என்பது விடுதலையாகும். கைவல்யம், ஜீவன் ஜீவனாகவே இருந்து, பரமானந்தம் அடையும் தன்மை பிரம்மாநந்தம், சாயுஜ்யம். பரமாத்மாவைப் போலவே ஜீவன் ஆனந்தத்தை அனுபவிப்

பது. மோட்சமாவது பரமபதம் சேர்தல். மோட்சத்துக்குரிய மார்க்கங்கள் ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம். இவற்றுள் பத்தியோகம் தலைசிறந்ததாகும். மோட்சம் தர வல்லவன் விஷ்ணுவே.

**பக்தி யோகம்**

ஆழ்வார்களின் பாசுரங்களால் பரமனின் அர்ச்சாவதாரம் ஏற்றம் படைத்தது. பாரதமெங்கும் பக்தி வெள்ளம் கரை புரண்டோடியது. பாடல் பெற்ற இடங்கள் எல்லாம் திவ்விய தேசங்களாகத் திகழ ஆரம்பித்தன. நூற்றெட்டுத் திருப்பதிகளில் எழுந்தருளிய எம்பெருமானை ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்தனர். இதுவே வைணவத்திற்கு ஏற்றதாக போற்றப்பட்டு வருகிறது. ஸ்ரீ வைணவர்களுக்கு ஒரே தெய்வம் ஸ்ரீமந் நாராயணன்தான். பகவத் கைங்கரியமும், சரணாகதியும் தலைசிறந்து விளங்குவது வைணவத்தில்தான்.

ஆகமங்களில் பெரிதும் போற்றப்பட்டு வரும் பாஞ்சராத்ரமும், வைகானசமும் ஸ்ரீ வைணவ ஆகமங்களாகும். வைணவ சம்பிரதாயத்தில்தான் 'பஞ்ச சம்ஸ்காரம்' என்னும் இன்றியமையாத சடங்கு இன்றும் நடைபெறுகிறது.

சுலபமாக அனுஷ்டானம் செய்யவல்லது இந்த வைணவ சமயம், சர்வம் விஷ்ணுமயம்!

நன்றி—ஞானபூமி ஆண்டு மலர் 1983
உபயம், எம்பார். எஸ். விஜயராகவாச்சாரியார்

# அர்ச்சனை மாலை

## I சிவார்ச்சனை
(தேவாரத்திலிருந்து திரட்டியது)

பூவார் சென்னிப் புனிதா போற்றி;
பாவார் பல்பொருள் பயனே போற்றி;
தோடுடைச் செவியா போற்றி; அமரர்
சூடா மணியே போற்றி; தோன்றாத்
துணையே போற்றி; துணையிலி போற்றி;
அணுவே போற்றி; அந்தணா போற்றி;
அகர முதல்வா போற்றி; பழியிலாப்
புகழாய் போற்றி; புண்ணியா போற்றி;
பித்தா போற்றி; பெம்மான் போற்றி;
அத்தா போற்றி; அழகா போற்றி.

கற்றவர் உண்ணும் கனியே வாழ்க;
உற்றவர் உறுநோய் களைவோய் வாழ்க;
கண்டாற் கரியாய் வாழ்க; தொண்டரை
ஆண்டாய் வாழ்க; ஆதீ வாழ்க;
மாலை எழுந்த மதியே வாழ்க;
காலை முளைத்த கதிரே வாழ்க;
கண்ணிற் கருமணி யாவாய் வாழ்க;
பண்ணிசை யாகி நிற்பாய் வாழ்க;
மேலை வினைகள் அறுப்போய் வாழ்க;
ஞாலத் தார்தொழும் நன்மைய வாழ்க;

அண்டகோ சரத்தின் உள்ளான் வெல்க;
இண்டைச் சடையான் வெல்க; இலைபுனை
வேலன் வெல்க; வில்லீ வெல்க;
சூலப் படையான் வெல்க; சுந்தரச்

சோதீ வெல்க; சுண்ணவெண் நீறணி
ஆதி வெல்க; ஆத்தன் வெல்க;
திரிதரு முப்புரம் செற்றவன் வெல்க;
பிரமன் சிரம்பீ டழித்தான் வெல்க;
சூர்தடி சேந்தன் தாதை வெல்க;
தாரணி மார்ப தலைவ வெல்க;

சித்தித் திறங்கள் காட்டுவான் அருள்க;
வித்தகன் அருள்க; வீரன் அருள்க;
அறிதற் கரியசீர் அம்மான் அருள்க;
துறவாதே கட்ட றுத்தான் அருள்க;
தூநெறிக் குந்தூ நெறியான் அருள்க;
ஆனையின் ஈருரி போர்த்தோன் அருள்க;
நணியான் அருள்க; நாயகன் அருள்க;
பிணியிலான் அருள்க; பிணிதீர்ப்பான் அருள்க;
போகமும் திருவும் புணர்ப்பான் அருள்க;
நாகம் வைத்த முடியான் அருள்க;

புகழ்தக் காய்ஜெய; பூமா ஜெயஜெய;
சகல சிவாஜெய; சைவா ஜெயஜெய;
வையகத் தாய்ஜெய; வாக்கினு ளாய்ஜெய;
கையெரி சூலம் ஏந்தி ஜெயஜெய;
ஒளியாய் ஜெயஜெய ஓசையாய் ஜெயஜெய
அளியாய் ஜெயஜெய அர்ச்சித் தேத்த
உரியவ ஜெயஜெய உத்த ரியப்பட்(டு)
அரையினாய் ஜெயஜெய அந்தி வட்டத்துத்
திங்கட் கண்ணியாய் ஜெயஜெய; ராஜ
சிங்கமே ஜெய நமச்சிவாய ஜெயஜெய.

II விஷ்ணு அர்ச்சனை
(திவ்யப் பிரபந்தத்தினின்றும் திரட்டியது)

அயர்வறும் அமரர்கள் அதிபதி போற்றி
உயர்வற உயர்நலம் உடையவ போற்றி
மயர்வற மதிநலம் அருளினாய் போற்றி
பயிலும் சுடரொளி மூர்த்தி போற்றி
பூமகள் நாயக போற்றி ஓடை
மாமத யானை உதைத்தவ போற்றி
அண்டக் குலத்துக் கதிபதி போற்றி
பிண்டமாய் நின்ற பிரானே போற்றி
அந்தா போற்றி அரியே போற்றி
பத்துடை யடியவர்க் கெளியாய் போற்றி,

புறந்தொழு வார்க்குப் பொய்யன் வாழ்க
மறைம லர்ச்சுடர் வாழ்க மறையோர்
கண்ணான் வாழ்க கவியுள்ளான் வாழ்க
பண்ணுளான் வாழ்க பண்பன் வாழ்க
மண்மகள் கேள்வன் வாழ்க மாக
விண்முதல் நாயகன் வாழ்க வித்தகப்
பிள்ளை வாழ்க பித்தன் வாழ்க
ஒள்ளியான் வாழ்க உயர்ந்தான் வாழ்க
மண்பகர் கொண்டான் வாழ்க நறுவிய
தண்துழாய் வேதியன் தாள்கள் வாழ்க.
மதகளி றன்னான் வெல்க மதுரைப்
பதியினன் வெல்க பத்தராவி வெல்க
அசுரர் கூற்றம் வெல்க மணித் தேர்
விசயற்கு ஊர்ந்தான் வெல்க யசோதைதன்
சிங்கம் வெல்க சிலையாளன் வெல்க
செங்கதிர் முடியான் வெல்க அடலாழிப்
பிரான் வெல்க பீடுடையான் வெல்க
இராவ ணாந்தகன் வெல்க அந்தமில்
புகழான் வெல்க புனலுருவன் வெல்க
திகழும் பவளத் தொளியான் வெல்க.
திருமக ளாந்தனிக் கேள்வன் அருள்க
பெருநிலம் விழுங்கிய வாயன் அருள்க
ஆலின் இலைப்பெரு மானே அருள்க
மால்விடை ஏழ்செற் றவனே அருள்க
தெள்ளிய சிங்கம் அருள்க கொள்ளைக்
கொள்ளிக் குறும்பன் அருள்க யார்க்கும்
அறிவரு மாயன் அருள்க ஏழேழ்
பிறவி யறுப்பான் அருள்க இமையவர்
தந்தையாய் அருள்க தவமுனி யருள்க
எந்தையே அருள்க ஏற்பரன் அருள்க.
உலகில் திரியும் கருமகதி யாய்ஜெய
உலகுக் கோருயிர் ஆனாய் ஜெயஜெய
வெஞ்சுட ரேஜெய விஷ்ணுவே ஜெயஜெய
தஞ்சு மாகிய தந்தை தாயொரு
தானு மாயவை அல்லனு மாம்ஜெய
மீனோ டாமை கேழலரி குறளாய்
முன்னும் இராம னாகித் தானாய்ப்
பின்னும் இராமனாய்த் தாமோ தரனாய்க்
கற்கியும் ஆவாய் ஜெயஜெய வெற்பெடுத்து
ஒற்கம் இன்றி நின்றாய் ஜெயஜெய

# ஒப்புமைப் பகுதி

(ஒற்றுமை வேற்றுமைகள்)

| எண் | விவரம் | மாணிக்கவாசகர் | நம்மாழ்வார் |
|---|---|---|---|
| 1. | ஊர் | திருவாதவூர் | திருக்குருகூர் [ஆழ்வார் திருநகரி] |
| 2. | நாடு | பாண்டிய நாடு | பாண்டிய நாடு |
| 3. | குலம் | ஆமாத்திய அந்தணர் | வேளாளர் |
| 4. | ஆசிரமம் | பிரம்மசாரி [மணமாகாதவர்] | பிரம்மசாரி [மணமாகாதவர்] |
| 5. | நூற்பெயர் | திருவாசகம் | திருவாய்மொழி |
| 6. | பாடல் எண் | 659 பாடல்கள் | 1102 பாடல்கள் |
| 7. | பாடற்பொருள் | நடராஜப் பெருமான் | திருமால் |
| 8. | வாழ்நாள் | 32 ஆண்டுகள் | 35 ஆண்டுகள் |
| 9. | வாழ்ந்தகாலம் | கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு | கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டு |

| | | | |
|---|---|---|---|
| 10. | ஆசிரியர் | ஆசிரியரிடம் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தார் | ஓதாது உணர்ந்தவர் |
| 11. | அருள் பாலித்தது | குரு தரிசனம் பெற்றது | எம்பெருமான் காட்சியளித்தார் |
| 12. | தொழில் செய்தது | அரிமர்த்தன பாண்டியரிடம் மந்திரி | திவ்விய தேசயாத்திரை செய்ததும் நூல் எழுதியதும் |
| 13. | முக்தி யடைந்தது | சிதம்பரத்தில் பேரொளியில் கலந்தது | சோதியிற் கலந்தார் |
| 14. | பதவி | சைவ சமயாச்சாரியருள் நான்காமவர் | ஆழ்வார்கள் பன்னிருவள் ஒருவர் காலத்தாற் பிற்பட்டவர் |
| 15. | சமயம் | சைவம் | வைணவம் |
| 16. | அகப்பொருள் பாடியது | இடைஇடையே திருவாசகத்திலும் திருக்கோவையார் என்ற தனி நூலிலும் | பாசுரங்களை அகத்துறையாகப் பாடியுள்ளார் |
| 17. | ஆறு | வைகை | தாமிரபரணி |

